ஸம்பந்தத்தாலே [நம்] - ஸம்ச்லேஷித்து, கூப்பிடுகைக்கு வேண்டுவது கொடுத்தபடியாலே - நம் என்கிறாள். [வாராநால்] - வயிற்றிலே வைத்து ரக்ஷிக்கவேண்டா, உடம்போடே அணைய வேண்டா, வந்து முகங்காட்டவமையுங்காணும். *த்ருஷ்ட ஏவ ஹி ந: சோகமபநேஷ்யதி ராகவ:, தமஸ் ஸர்வஸ்யலோகஸ்ய ஸமுத்யந்நிவ பாஸ்கர:*. [இனி] - இவ்வளவில். [ஆவிகாப்பார் - ஆர்] - ப்ரளயாபத்தில் அகப்பட்டாரோபாதி ஆபந்நையாயிருக்கிற நான் ரக்ஷிக்கவோ, "எம்மின் முன்னவனுக்கு மாய்வராலோ" — என்கிறபடியே 'இவளுக்கு அவன் வேணும்' என்று என் பேற்றுக்கு எனக்குமுன்னே நோவுபடுகிற தோழி ரக்ஷிக்கவோ, ஹிதஞ்சொல்லுகிற தாயார் ரக்ஷிக்கவோ, பழிசொல்லுகிற ஊரார் ரக்ஷிக்கவோ? எல்லே - ஆச்சர்யத்திலேயாதல் தோழியை ஸம்போதிக்கிறளாதல். மேலே "அன்னையரும் தோழியரும்" என்று - அவர்களும் உறங்குகிறார்களென்று நிற்கச்செய்தேயும், தன் ஆபத்தே செப்பேபடாக "இவ்வளவில் அவன் உணர்ந்திருக்க ஸம்பாவனையுண்டு" என்று பார்த்து - எல்லே என்கிறாள். வல்வினையேன் - ஸர்வரக்ஷகனுமாய், உடம்போடணைக்குமாரைப்பிரியாதவனுமாயிருக்கிற அவன் வந்து உதவாதபடியாயிருக்கிற மஹா பாபத்தைப்பண்ணினேன். வல்வினையேனாவி - பிரிவே ஹேதுவாக நாசோந்முகமாயிருக்கிற என்னுடைய ஆவியை. "பிரிவுக்குச்சிளையாத இது இனி முடியப் புகுகிறதோ" என்கிறாள். ரக்ஷகனானவன் வந்திலன், எனக்குமுன்னே தோழி நோவுபட்டுக்கிடந்தாள், இனி பாதகர் ரக்ஷகராகவோ.

ஆவிகாப்பாரினியார் ஆழ்கடல்மண்விண்மூடி*
மாவிகாரமாய் ஓர்வல்லிரவாய்நீண்டதால்*
காவிசேர்வண்ணன் என்கண்ணனும்வாராநால்*
பாவியேன்நெஞ்சமே! நீயும்பாங்கல்லையே. (2)

ஓ.—இரண்டாம்பாட்டில். இத்தசையிலே க்ருஷ்ணனும் வருகிறிலன், மஹாபாபியான என்னோடே ஸம்பந்தத்தாலே, நெஞ்சே, நீயும் பாங்கன்றியே ஒழியாநின்றாய் என்கிறாள். [ஆழ்கடல் என்று தொடங்கி] - அபரிச்சேத்யமான கடலையும் பூமியையும் ஆகாசத்தையும் அடையமறைத்து அவ்வளவன்றிக்கே மஹாவிகாரத்தையுடைத்தாய் த்வாதசாதித்யர்கள் வந்தாலும் பேதிக்கவொண்ணாதது ஒரு ராத்ரி வந்து நலிந்து அவஸாநமில்லாதபடியாயிற்று. [காவிசேர்வண்ணன்] - காவி போலேயிருக்கிற நிறத்தையுடையவன்.

இ.—இரண்டாம்பாட்டில், இத்தசையில் உதவக்கடவ க்ருஷ்ணனும் வருகிறிலன், நெஞ்சே, நீயும் அபவ்யமாகாநின்றாயென்கிறாள். [இனி-ஆவிகாப்பார்-ஆர்] - உதவுமவன் உதவுகிறிலன், நெஞ்சும் பாங்காகிறதில்லை, இனி காப்பார் ஆர்? [ஆழ்கடல் இத்யாதி] - அபரிச்சேத்யமான கடலையும் பூமியையும் ஆகாசத்தையும் மறைத்து, அவ்வளவிலும் பர்யவஸியாதே மஹத்தான விகாரத்தை உடைத்தாய், ஸ்ரீவிச்வரூபங்காட்டினாப்போலே, ஸர்வசக்தி நித்யவிபூதியையும் கணிசிக்கிறாப்போலேயிராநின்றது. அத்விதீயமாய் அதிப்ரபலமான ராத்ரியாய் முடிவுகாணப்போகிறதில்லை — த்வாதசாதித்யர்களாலும் பேதிக்கப்போகாத ப்ராபல்யம். இதனுக்கும் ராத்ரிக்கும் வாசி தெரிவிக்கமாட்டாமையாலே - இதனை ராத்ரியென்கிறாள். [காவிசேர்வண்ணன்] - "புல்லேந்தீவர பத்ராபம்" என்கிற நிறத்தையுடையவன் - இருளோடு செறிந்த நிறமாகையாலே, இருளோடே செறிந்து வரலாங்கிடீர் கம்ஸன் காவலாக வைத்த துஷ்ப்ரக்ருதிகள்கண்படாதபடி இருளிலே வந்து அவதரித்தவன் அன்று தாமஸப்ரக்ருதிகளை போக்க வந்தவனுக்கு, இன்று இத்தமஸ்ஸைப் போக்கலாகாதோ. [என்கண்ணன்] - முன்பு ராத்ரிகளிலே வந்து உதவுமவன். [பாவியேன்நெஞ்சமே] - அவனும் என்னுடையவனன்றே யுதவாதொழிந்தது. ஆபத்துக்கு உதவாதவனன்றே, அது உனக்குமொக்குமிறே. என் கண்ணன் என்னலாம்படியிறே அவன்படியதை. பவ்யரானாரடங்க அபவ்யராம் பாபத்தைப் பண்ணினேன். [நீயும்பாங்கல்லையே] - சேஷியாய் ஸ்வதந்த்ரனானவன் செய்யுமத்தை, பாரதந்த்ர்யமே ஸ்வரூபமாயிருக்கிற நீயும் செய்யவேணுமோ. "ப்ரணயித்வத்தை விட்டேன்" என்னலாம், ஸ்வதந்த்ரனாகையாலே; உனக்கு அங்ஙன் இருப்பதொன்றுண்டோ?

தில்லை- அவ்வளவன்றிக்கே, ''ராத்ரி'' என்கிற பேரைப்பொகட்டு, ''கல்பம்'' என்கிற பேரையுடைத்தாய்; அவ்வளவிலும் தலைக்கட்டாதே நெடுகாநின்றது. [காயும்கடுஞ் சிலை] - ப்ரதிபக்ஷத்தை தக்தமாக்குவதாய், பெருமாள்கண்பார்க்கிலும் கண்பாராதசிலை. ''அவஷ்டப்ய மஹத்தநு'', வில்லையணைக்கவே பணி போரும்படியிறேயிருப்பது. [என்காகுத்தன்] - பிராட்டிக்கு உதவினது தனக்கு உதவிற்றென்றிருக்கிறள். ஒருநாள் ஓராபத்திலே யுதவினர்க்குப் பின்பு உதவலாகாதோ? ''தயரதற்குமகன்தன்னை யன்றி மற்றிலேன் தஞ்சமாகவே'' என்னக்கடவதிறே. கீழே ''கண்ணனும் வாரானால்'' என்றாள், ''அபிஷிக்தக்ஷத்ரியபுத்ர னல்லேன்'' என்று அவன் வரத்தவிர்ந்தாலும், முடிசூடிநோக்கிப்போந்தகுடியிலே பிறந்தார்க்கு வரவேண்டாவோ. ''சினத்தினால் தென்னிலங்கைக்கோமானைச் செற்ற மனத்துக்கினியானை'' என்றார்களிறே பெண்கள் இருந்தவிடத்தே சென்று விரோதியைப்போக்கினவன் வருகிறிலன். ''அபியாதாப்ரஹர்த்தாச'' என்னக்கடவதிறே. [மாயும்வகையறியேன்] - அபிமதர் வாராவிட்டால் முடிகையிறே ப்ரியம், அதுக்கு விரகறிகிறிலேன். ''காலோஹி துரதிக்ரம:'' என்றாளிறே பிராட்டி. [வல்வினையேன்] - அவன்வாராமைக் கடியானபாபத்தைப் பண்ணினேன். முடியவும் அரிதான பாபத்தைப் பண்ணினேன். பாபம் மரணஹேது வன்றிக்கே ஜீவிக்கைக்கு ஹேதுவாயிருக்குமாகாதே, ஜீவிக்கை தேட்டமானபோது அரிதாம், முடிகையும் தேட்டமானபோது அரிதாம், அநிஷ்டாவஹம் பாபமித்தனையிறே. [பெண்பிறந்தே] - முடிகையும் ஜீவிக்கையும் ஸ்வாதீநமல்லாத ஜந்மத்தே பிறந்தேன். எல்லாவளவிலும் அவனைநோக்கவேண்டும் ஜந்மமிறே. முடியும்போது, ஆண்பிள்ளையுமாய் ஸ்வதந்த்ரனுமான சக்ரவர்த்திபோல்வார் வேணுமாகாதே.

௩. —மூன்றாம்பாட்டு. ஸகலது:க்கங்களையும் போக்கும்ஸ்வபாவனான காகுத்ஸ்தனும் வருகிறிலன், பாதந்த்ரையாகையாலே முடியவும் விரகறிகிறிலேனென்கிறாள்.

[நீயும்பாங்கல்லைகாண் நெஞ்சமே] - கைக்கு அக்கரைப்பட்டவன்று, இளைய பெருமாளைப்பார்த்து, ''பிள்ளாய், நீயும் படைவீடேறப்போ'' என்றாரிறே, ''வநவாஸம் இவரைப்பொழியவும் தலைக்கட்டலாம்'' என்று ப்ரமித்து; அப்படியே இவரும் தந்திருவுள்ளத்தைப்பார்த்து, ''நீயும்பாங்கல்லைகாண்'' என்கிறார். *மநஏவ* என்கிறபடியே - நெஞ்சைக் கொண்டேயிறே எல்லாம் பெறவிருக்கிறது. ஆயிருக்கச் செய்தேயும், [illegible] என்கிறாள். [நீளிரவு இத்யாதி] முதலிலே நெடிதான ராத்ரியானது; அதுக்குமேலே, ஒருமுடிவு காணவொண்ணாதபடி யிராநின்றது. அடிகாணவொண்ணாதபடியுமாய், முடிவுக்கும் ஓரெல்லை காணவொண்ணாதபடி யிராநின்றது. முடிவுகாணவொண்ணாதிருக்கச்செய்தேயும் அடியுண்டாயிருப்பனவுண்டிறே, இது அப்படி யிருக்கிறதில்லை. [ஓயும்பொழுதின்றி] ஒன்றவிடத்தில் நின்றும் கால்வாங்கக்கடவதன்றிக்கே. [ஊழியாய்] ''சாத்தன்'' கூத்தன்'' என்றாப்போலே சில பேராய், அவர்கள் தாங்கள் ஜீவிக்கப்புக்கவாறே சிறுபேர் தவிர்ந்து ''சோழக்கோனார், தொண்டைமானார்'' என்று பட்டப்பேர் பெற்று வாழுமாபோலே, ராத்ரியானதுபோய் ''கல்பம்'' என்னும் பேரையுடைத்தாகாநின்றது. [நீண்டதால்] அதுதனக்கும் ஓரவஸாநமுண்டிறே. அதுவுமில்லையாயிற்று இதுக்கு.

[காயும்கடுஞ்சிலை இத்யாதி] ஒருத்தியுடைய நெடிதான ராத்ரியைப் பரிஹரிக்கைக்காக வியாபரிக்க வில்வலியையுடையவனும் வருகிறிலன். ப்ரதிபக்ஷத்தின்மேலே காயாநிற்பதாய், எதிரிகள்பக்கல் பெருமாள் கண்பார்க்கிலும் தான் கண்பாராதபடியான சிலையையுடையவன். அவனுடைய சாங்கம் என்னளவிற் கண்டிலேன். [சாங்கமென்று - பக்ஷபாதத்துக்குப்பேர்.] [என்காகுத்தன்] பிராட்டிக்கு உதவினதும் 'தனக்கு உதவிற்று' என்றிருக்கிறாள். ''தயரதற்கு மகன்தன்னையன்றி மற்றிலேன் தஞ்சம்'' என்று நான் தஞ்சமாக நினைத்திருக்குமவனும் வருகிறிலன். ''சினத்தினால் இத்யாதி'' - பிராட்டியுடைய விரோதியைப் போக்கினது அவனுக்குக் காரியம் செய்தானாக நினைத்திருக்கையன்றிக்கே, தன் சினம் தீர்த்தானாயிருக்கு மவன். [காகுத்தன்] இறே, ''கண்ணனும்வாரானால்'' என்றது; அபிஷிக்தக்ஷத்ரியபுத்ரரல்லாதார்தாம் தவிருகிறார்கள், முடிகுடி நோக்கும் குடியிலே பிறந்தவனுக்கு வரத்தட்டென். ககுத்ஸ்தகுலோத்பவனானவனும் வாராதொழிவதே! [வாரானால்] எதிரிகள்வரப் பொர விருக்கையன்றிக்கே தானே படுத்துவிட்டுச் சென்று பொருமவனும் வருகிறிலன்.

*அபிபாதா*-எதிரிகள்வரப் போரவிருக்கையன்றிக்கே, எடுத்துவிட்டுப்போருகையும் தமக்கே பணியாயிருக்கும். *ப்ரஹர்த்தாச* தாமிக்கலையில்நின்று "முதல்வெட்டு ஆரது" என்றால், அதில் முற்பாடும் தம்மதாயிருக்கும். *ஸேநாநயவிசாரத:*- தாம் போகாதே, தாசியுமணியும் பேரணியுமாக வகுத்துவிட்டால், ஒக்கநின்று பொருவித்தாற்போலே வென்று மீளும்படி படைநோக்கவல்லவர். [மாயும்வகையறியேன்] இவன் வாராமையறிந்தால் இனிமுடிகை பிறே ஸுலபம், முடியும்விரகறிகிறிலேன். [வல்வினையேன்] முடிகை ஸுலபமாய்த் தேட்டமானால் அதுவும் கிடையாதபடியான பாபத்தைப் பண்ணினேன். பாபமானது விநாசஹேதுவானகையன்றிக்கே, ஜீவிக்கைக்கு ஹேதுவாவதே! ஜீவிக்கைதேட்டமானபோது அரிதாம், முடிகை தேட்டமானபோது அரிதாம், ஏதேனுமாக அபேக்ஷிதமானவிடம் பாபமாயித்தனையிறே. [பெண்பிறந்தே] பாரதந்த்ரஜந்மத்திலே பிறந்தார்க்கு நினைத்தபோது முடியப்போமோ. பிறர்க்காக ஜீவிக்கவேண்டும் பாரதந்த்ரஜந்மத்திலே பிறக்கைக்கீடான மஹாபாபத்தைப் பண்ணினேன். *பாபாநாமாகரஸ் ஸ்த்ரிய:* என்னக் கடவதிறே. *நசாஸ்ய மாதா* - பிராட்டி திருவடியைக் கண்டவாறாம் பெருமாள்பக்கல் ப்ரணயரோஷத்தாலே, "இவன் அவர் வரவிட்ட ஆள்" என்று சீறிச் சிலவார்த்தையருளிச்செய்ய; "தேவரீர் எழுந்தருளியிருந்தவிடம் அறியாமலிருந்தாரித்தனையல்லது பாவபந்தத்தில் குற்றம் போராமையோ, அறிந்த பின்பு இவித்தாழ்த்தாராகிலன்றே குற்றமாவது" என்று அச்சிவிட்டு ஆறும்படி சிலவார்த்தை விண்ணப்பஞ்செய்து பின்னையுந்தான், "அவரைப்பிரிந்து பத்துமாஸமுண்டே, இவ்வளவும் முடியாமல் தரித்திருந்ததன்றோ தேவரும்" என்று தனக்குக்கருத்து என்னுமிடம் தோற்றவிருந்தான்; அதுவோ உனக்குத்தீனவு! வாராய், நாட்டாருக்கு, மாதாவென்றும் பிதாவென்றும் ப்ராதாவென்றும் பந்துக்களென்றும் பலதலைத்திருக்கையாலே ஸ்நேஹமானது எங்கும் பாலிபாய்ந்திருக்கும்; பெருமாள் அங்ஙனன்றிக்கே, எல்லார்பக்கல்பண்ணும் ஸ்நேஹத்தையும் என்பக்கலிலே ஒருமடையாகச் செய்துவைக்கையாலே, எல்லாம் செய்தாலும், காடுமலையணிசெய்து விரோதிவர்க்கத்தைக் கிழங்கெடுத்து 'தண்ணீர் தண்ணீர்' என்று வருகை தவிரார்; தாபார்த்தன் விடாய்ப்பட்டுப் பந்தலேற வரக்கொண்டு தண்ணீர்ச் சாலுநட்டிக்கிடந்தால் பிழையாதாப்போலே, அவர் இப்படிவரக்கொண்டு காணின்றிக்கே இருப்பனும்தல் பின்னையவரைக்கிடையாதென்று அவர்க்காக என்னை நோக்கிக்கொண்டிருந்தேன். அவரைக்கண்ட பிற்றைநாள் நான் இருந்தேனாகிற் காண் நீ இவ்வார்த்தை சொல்லுவதென்றாளிறே. *தூத* - முன்பு 'வாநர'' என்றாப்போலே சொல்லிப்போந்தவள் இப்போது அவர்பக்கலுண்டான சிவிட்டு இவ்வளவும் ஏறிப்பாய்ந்து அவர் வரவிட வந்தவனன்றோ நீயும் என்றாளிறே. [வல்வினையேன் பெண் பிறந்தே - மாயும் வகை யறியேன்] ஸ்வேச்சாதீநமான மரணமாம்போது ஆண்பிறந்த சக்ரவர்த்தி பிள்ளைகளாக வேணுமாகாதே; ஜ்ஞாநவான்களாதல் ஸ்வதந்த்ரராதல் செய்ய வேணும்; அறிவிலிகளான பெண் பிறந்தார்க்கு நினைத்தபடி முடியப்போமோ.

பெண்பிறந்தாரெய்தும் பெருந்துயர்காண்கிலேனென்று*
ஒண்சுடரோன்வாராதொளித்தான்* இம்மண்ணளந்த
கண்பெரியசெவ்வாய் எங்காரேறுவாராதால்*
என்பெரியசிந்தைநோய் தீர்ப்பாராரென்னையே? (4)

ஜ.—நாலாம்பாட்டில், கண்டார்க்குப் பொறுக்கவொண்ணாதபடி வ்யஸநப்படாநிற்க, எல்லாருடைய ஆபத்துக்களையும் போக்குவானை திருவுலகளந்தருளின எம்பெருமானை வருகிறிலன், என்னுடைய நிரவதிக சிந்தாவ்யஸநத்தைப் போக்குவார் ஆர்? என்கிறாள். [பெண்பிறந்தார் என்று தொடங்கி] - நான்படுகிற மஹாதுக்கத்தைப் பெண்ணாய்ப்பிறந்தார் படும் மஹாதுக்கம் இனி நான் காண மாட்டேனென்று தான்வரில் நமக்கு ஆச்வாஸகரமான ஒளியையுடைய ஆதித்யன் வாராதே ஒளித்தான் [இம்மண் என்று தொடங்கி] - குணாகுண நிரூபணம்பண்ணாதே எல்லாருடைய ஆபத்துக்களையும் போக்கி ரக்ஷிக்கும் ஸ்வபாவனும் நிரதிசயஸௌந்தர்யயுக்தனும் ஜகத்தினுடைய ஆபந்நிவாரணத்தாலே மேநாணித்திருக்கிறவன்,

இ.—நாலாம்பாட்டில், கண்டார்க்குப் பொறுக்கவொண்ணாத வ்யஸநம் செல்லாநிற்க, வரையாதே ரக்ஷிக்கும் ஸ்ரீவாமநன் வருகிறிலன், என்னுடைய சிந்தாவ்யதையைப் போக்குவாராரென்கிறாள். [பெண்பிறந்தார்] - பாரதந்த்ரைகளாய் ம்ருதுப்ரக்ருதிகளாய்ப்பிறந்த ஸ்த்ரீகள். [எய்தும்பெருந்துயர்] - அநுபவிக்கும் மஹாதுக்கம். பாரதந்த்ர்யத்தாலே முடியவும் மாட்டாதே, மார்த்தவத்தாலே க்லேசமும் பொறுக்கமாட்டாதொழிகை. [காண்கிலேனென்று] - இந்த து:கத்தைப் பொறுக்கமாட்டேனென்று. ஸர்வரக்ஷகன் பொறுக்குமித்தனைபோக்கி, ரக்ஷணமாத்ரத்திலேயந்வயித்தவர்கள் பொறுக்கவல்லர்களோ; வகுத்தவன் பொறுக்குமித்தனைபோக்கி, அந்யர் பொறுக்கவல்லர்களோ; "உத்தர்த்துமர்ஹஸி ஹரேத் புருஷோத்தமோऽஸி" என்று புருஷோத்தமன் பொறுக்குமித்தனைபோக்கி புருஷர்கள் பொறுக்கவல்லர்களோ. [ஒண்சுடரோன்] - தோற்றத்திலே து:க்கநிவ்ருத்தியைப் பண்ணுமவன். [வாராது] - ஈச்வராஜ்ஞையாலே இருந்தவிடத்திலிராதவனும் தோற்றுகிறிலன். [ஒளித்தான்] - ஈச்வரபடர் காணவொண்ணாதபடி மறைந்தான். "இத்தர்மஹாநிகாண்பதில். ஈச்வராஜ்ஞாதிலங்கநத்தால்வந்தது அநுபவிக்கவமையும்" என்றிருந்தான். [இம்மண்ணளந்த] - இப்பூமிக்கு என்ன ஆபத்துண்டாய் அளந்தான். இப்பூமி மஹாபலிகையிலகப்பட்டதெல்லாம் இவள் விரஹத்தின்கையிலே அகப்பட்டாளாயிற்று பூமியை வரையாதேயளந்தவன். [கண்பெரிய செவ்வாய்] - மஹாபலியாலே நெருக்குண்ட பூமியின்க்லேசம் போகக் குளிரநோக்கின கண்ணிற்பரப்பை யுடையனாய், அதின்க்லேசம் போனதினாலுண்டான ப்ரீதியாலே பண்ணின ஸ்மிதத்தாலே சிவந்த அதரத்தையுடையவன். பிறர்ப்ரயோஜநத்துக்கு இரங்குமவன் தன்ப்ரயோஜநத்தை விட்டுவைப்பதே. [எங்காரேறு] - பூமியின்க்லேசம்போனது தன்பேறென்னுமிடம் நிறத்திலேதோற்றி, "இதுவைப்பட்டது" என்று மேனாணித்திருந்தவன். [வாரானால்] - இரக்கவேண்டா, அளக்கவேண்டா, வடிவழகைக் காட்டவமையும். [எண்பெரியசிந்தைநோய்] - வேதங்களுக்கு நிலமல்லாத பகவத்விஷயத்தை யுள்ளபடிபேசினார், தம்முடைய சிந்தாவ்யதை தம்முடையஜ்ஞாநத்துக்கு அவிஷயமாயிற்று. "அபரிச்சிந்நம்" என்னுமதொழிய "இவ்வளவு" என்னவொண்ணாது. [தீர்ப்பாரார்] - வரையாதே ஸர்வரக்ஷகனானவன் உபேக்ஷித்தபின்பு ஆராலேபோக்கலாம். [என்னையே] - மறக்கவும் மாட்டாதே நினைக்கவும்மாட்டாதேயிருக்கிற வென்னை. இது இவளுக்கேயுள்ளதொன்று.

ஈடு.—நாலாம்பாட்டு. கண்டார்க்குப் பொறுக்கவொண்ணாதபடி வ்யஸநம்செல்லாநிற்க, வரையாதேரக்ஷிக்கும் ஸ்ரீவாமநனும் வருகிறிலன், என் சிந்தாவ்யஸநத்தைப் போக்குவாரார்? என்கிறாள்.

[பெண்பிறந்தார் இத்யாதி] - பரதந்த்ரஜந்மமாகையாலே முடியவும் பெறாதே, ம்ருதுஸ்வபாவைகளாகையாலே பிரிவும் பொறுக்கமாட்டாதேயிருக்கிற ஸ்த்ரீகள் அநுபவிக்கிறமஹாது:க்கத்தைக் காணமாட்டேனென்று. [ஒண்சுடரோன் வாராதொளித்தான்] ஸர்வரக்ஷகன் பொறுக்குமித்தனை போக்கி, ரக்ஷணைகதேசத்திலே அந்வயித்தவர்களுக்குப் பொறுக்கப்போமோ? புருஷோத்தமன் பொறுக்குமித்தனை போக்கி, புருஷர்களால் பொறுக்கப்போமோ? தன் தோற்றரவிலே ஸகல க்லேசமும் போம்படியான ப்ரகாசத்தையுடையவனும் வாராதே மறைந்தான். வந்திலன் என்னாதே, ஒளித்தானென்கிறது - *பீஷாऽஸ்மாத் வாத: பவதே*, இத்யாதியாலே பகவதாஜ்ஞையாலே மூப்பதுவட்டம் வரவேணுமே; இங்ஙனேயிருக்கிறவன் "ஈச்வராஜ்ஞையை மறுக்கில் வேணுமாகில் தலையை அறுத்துவைக்குமித்தனையன்றோ, இக்கொடுமை என் கண்ணால் காணப்போகாது" என்று ஈச்வரபடர் தேடிவந்தாலும் காணாதபடி யொளித்தான். "ஒளியவன் விசும்பியங்குந்தேரும் போயிற்று" என்னக்கடவதிறே. வரவுக்கு லேசமும் காணவொண்ணாதபடி மறைந்தது; *ஸோऽபிரேணுர்ந லக்ஷ்யதே*, "சுழன்றிலங்கு வெங்கதிரோன் தேரோடும்போய்மறைந்தான்" என்னுமாபோலே. [இம்மண்ணளந்த] இப்பூமிக்கு என்ன துயருண்டாய் அளந்துகொண்டான். பூமிக்கு மஹாபலியாலுண்டான இடரன்றோ எனக்கு ராத்ரியாலுண்டான இடர். வரையாதே எல்லாரையும் ரக்ஷிக்குமவன். [கண்பெரியசெவ்வாய் இத்யாதி] க்ருபையால் பெரியனாய் பூமியையளந்து, பூமியிலுள்ளார் விடாய்போம்படி குளிரக்கடாக்ஷித்து அத்தாலுண்டான ப்ரீதிப்ரகர்ஷந்தோற்ற ஸ்மிதம் பண்ணுகையாலே சிவந்த அதரத்தையுடையவனாய். [எம்] ஸர்வவிஷயமாகப்பண்ணும்

ரக்ஷணத்தையே ஸ்வபாவமாகவுடையவனுமாய். [கார்] இவற்றை ரக்ஷிக்கையால் தன்னிறம் பெற்றிருப்பானுமாய். [ஏறு] "அது தன்பேறு" என்னுமிடந்தோற்ற மேனாணித்திருக்குமவனும் வருகிறிலன். எம் என்று - ஸர்வரக்ஷகனுடைய ரக்ஷ்யவர்க்கத்திலே தானும் அந்யதமையாகையாலே சொல்லுகிறாள். என் என்று - பாடமானபோது - பண்டு என்னோடே கலந்ததாலே தன்னிறம்பெற்று மேனாணித்திருந்தவனென்கை [வாரானால்] இரக்கவேண்டா, அளக்கவேண்டா, வடிவைக் காட்டவமையும். [என்பெரியசிந்தைநோய்] *யஸ்யாமதம் தஸ்ய மதம்* என்கிறபடியே - வேதாந்தங்கள், விலமன்று என்று பரிச்சேதிக்கப் புகுந்த விஷயத்தை இத்தனை போதும் பேசினார். தம்முடைய சிந்தாவ்யாதை மயர்வறமதிநலமருளப் பெற்ற ஜ்ஞானத்துக்கு அவிஷயமாயிருக்கின்றது. 'என் பெரியது' என்னுமித்தனை; இவ்வளவு என்னப்போகாது, பெரிய விஷயத்துக்கு அநுரூபமாயிறே சிந்தாவ்யாதைதான் இருப்பது, அதுக்கு ஓரவதியில்லையே. *ததப்ராப்திமஹாதுக்க*. [சிந்தைநோய் தீர்ப்பாரார்] சிந்தாவ்யதை போமித்தனையேவேண்டுவது, அவனை மறக்கவும் அமையும்: "ஏதுசெய்தால் மறக்கேன்" என்னுமவர்களிறே இவர்கள் தான், அவனை மறக்கவுமாம் நினைக்கவுமாம், வ்யஸநம்போமித்தனையே வேண்டுவது. இப்போது மறக்கவும் அமையும் என்றது மறக்கை உத்தேச்யமாய்ச் சொன்ன வார்த்தையன்றே; ஓடுகிற வ்யஸநாதிசயத்தைச் சொன்னபடியிறே. அலாப தசையில் ஸ்ம்ருதிதான் மிகவும் ஆற்றாமைக்கு உடலாயிருக்குமிறே, "கண்ணன்நாமமே குழறிக்கோன்பீர்," "காட்டேன்மின் நும்முருவென்னுயிர்க்கதுகாலன்" எனக்கடவதிறே. [என்னையே] இவ்வ்யக்திபோன்றுக்குமேயுள்ளதொரு வ்யஸநமாயிற்று. மாட்டார் ஸ்மரித்து துக்கிவிருக்கியண்ணிக்கொண்டு போகாநின்றார்களிறே, அது செய்யலாயிறே ஸாதநபுத்த்யா இருக்கிறார்க்கு, *நிதித்யாஸிதவ்ய:* என்று - ஸ்ம்ருதிதன்னையே விதியாநின்றதிறே: அவனுடையபடியிலே இருக்கிறார்க்கிறே இதுள்ளது.

ஆரென்னையாராய்வார் அன்னையரும்தோழியரும்*
நீரென்னேயென்னாதே நீளிரவுந்துஞ்சுவரால்*
காரன்னமேனி நங்கண்ணனும்வாரானால்*
பேரென்னைமாயாதால் வல்வினையேன்பின்னின்றே. (5)

ஒ.—அஞ்சாம்பாட்டில், ஆர்த்ததசையிலே உதவக்கடவரான அன்னையரும் தோழிமாரும் ஆராய்கிறிலர்கள், அவர்கள் உதவாதபோது வந்து உதவக்கடவ க்ருஷ்ணனும் வருகிறிலன், நான் போய் சப்தாவசேஷையானேன் என்கிறாள். [அன்னையரும் தோழியரும் நீரென்னேயென்னாதே நீளிரவும் துஞ்சுவரால்] - நான் அவஸந்நையானால் உதவக்கடவ நீங்களும் 'நீ என்பட்டாய்?' என்னாதே நான் படுகிற இராவெல்லாம் கிடந்து உறங்காநின்றீர்கோள். [நீர் என்னே] - 'உன்னுடைய நீர்மை என்?' என்று வினவாதே உறங்காநின்றார்கள் என்றுமாம். [கார் என்று தொடங்கி] - வர்ஷுகமான மேகம்போலே ச்ரமஹரமான திருநிறத்தையுடைய க்ருஷ்ணனும் வருகிறிலன், நான் முடிந்தபின்பும் என்பேர் என்னை முடிந்தேறுகை கொடுக்கிறதில்லை.

இ.—அஞ்சாம்பாட்டில், ஆபத்திலுதவும் அன்னையரும்தோழியரும் ஆராய்கிறிலர், அவர்கள் உதவாதபோது உதவும் க்ருஷ்ணனும் வருகிறிலன், நான் சப்தாவசேஷையாகாநின்றேனென்கிறாள். [ஆரென்னையாராய்வார்] - தன்னைநலிந்த ராக்ஷஸிகளையுங்கூட "அஞ்சாதே" என்று ஆராய்ந்தாளிறே "ஆரென்னையாராய்வார்" என்கிறாள். [அன்னையரும் தோழியரும்] - இவளுடைய அவஸாதாதிசயம், தாய்மாரோடு தோழிமாரோடுவாசியறச் சொல்லும்படியாய்விட்டது. என்கின்னவேநினைவாயிருப்பார்க்கும், நிஷேதிப்பார்க்கும் வாசி யற்றது. [நீரென்னே இத்யாதி] - அன்னையரும் தோழியருமான நீங்கள், என்னே யென்னாதே - என்பட்டாயென்னாதே யென்னுதல்; அன்றியே, [நீர்] - இதொரு நீர்மையே - அவனுக்குத் தன்னையொழியச் செல்லுவதாயிருக்க, அவனையொழியத் தனக்குச் செல்லாதபடியாயிருக்கிற இதொரு ஸ்வபாவமே! [என்னே] - இதோராச்சர்யமென்னுதல். [நீளிரவுந்துஞ்சுவரால்] - நெடியராத்ரியெல்லாம்

எனக்கு உறங்காதொழிகை ஸ்வபாவமாயிருக்கிறப்போலே அவர்களுக்கும் உறங்குகையே ஸ்வபவமா, யிற்று. ப்ரதமயோஜனையில், துஞ்சுதிரென்னுமர்த்தத்தைக் காட்டக்கடவது. [காரன்ன] - வர்ஷுகமான மேகம்போலே ச்ரமஹரமான வடிவையுடைய க்ருஷ்ணனும் வருகிறிலன். ''தாஸாமாவிரபூத்'' என்று ஒருநீர்ச்சாவியிலே வர்ஷித்தாப்போலே தோற்றுமவனும் வருகிறிலன். [நங்கண்ணனும்] - பெண்களுக்கே யுதவுமவனும் வருகிறிலன். [பேரென்னைமாயாதால்] - கார்யத்தாலே நான்முடியச்செய்தேயும், ''இன்னாள், இன்னாள்'' என்கிற பேர் என்னை முடிந்தேனாக வொட்டுகிறதில்லை. அவனோடொத்ததீ யிதுவும், அவன் வாராதவோபாதி இதுவும்போகிறதில்லை. இத்தால் - சென்றற்றநிலையைச் சொல்லுகிறது. சப்தாவ சேஷையானேனென்றபடி. [வல்வினையேன்] - முடிகைதேட்டமானவளவிலும் முடியப்பெறுதபாபத்தைப் பண்ணினேன். [பின்னின்றே] - நான் முடிந்தபின்பும் பின்னே நின்று பேர் என்னை முடிந்தேனாகவொட்டு கிறதில்லை. ''நாமரூபே வ்யாகரவாணி'' என்கிறபடியே ஒக்கவந்தால், ஒக்கப்போகலாகாதோ?

௫.—அஞ்சாம் பாட்டு. ஆபத்தில் உதவும் அன்னையரும் தோழியரும் ஆராய்கிறிலர் கள், அவர்கள் உதவாதபோது உதவும் க்ருஷ்ணனும் வருகிறிலன், நான் சப்தாவசேஷை யானேனென்கிறாள்.

[ஆரென்னையாராய்வார்] - *தாஸீநாம் ராவணஸ்யாஹம் மர்ஷயாமீஹ துர்ப்பலா *- திருவடி சென்று ராக்ஷஸிகளை நலியப்புக: இவர்கள் ராவணன்சோறுண்டு அவனுக்குப் பரதந்த்ரை களாகையாலே என்னை நலிந்தார்களாகில், தங்களாலே வந்ததொன்றன்றாகில், அதுதனக்கு நாமும் பொறுத்தோம்'' என்று, நேர்த்தரவு கொடுத்தபின்பு இனி இவற்றை நலிகிறதென்? என்ன; ராவணனும்பட்டானாகில் நம்மை நெடுநாள் நலித்துபோந்த இப்பெண்பயல்களை இப்போது பொறுக்க வேண்டுகிறதென்? என்ன *துர்ப்பலா* ''சிலர் நம்மை நலிந்தார்கள்'' என்று நாம் அவர்களை நலியப்புக்கால், அப்போதே அவர்கள்கண்குழிவு காணமாட்டாதார் பின்பு செய்வதென் பொறுமல். ராவணனும்பட்டு, பெருமாளும் விஜயிகளான பின்பு, இனி இகொழிய வேறொரு ரக்ஷகத்வமில்லைபிறே. தன்னைநலிந்த ராக்ஷஸிகளையும், நீங்கள் அஞ்சாதேகொள்ளுங்கோள் என்று *பவேயம் சரணம் ஹி வ:* என்னக்கடவ அவள், இப்போது, தன்னை யாராய்வார் தேட்டமாய் - ஆரென்னையாராய்வா ரென்கிறாளிறே. [அன்னையருந் தோழியரும்] என் தசையைக்கண்டு என்னேறுபோக்க உறக்கந்துறந்தவர்களோடு, ''உறக்கம் துாக்கக்கடவதன்று'' என்று நிஷேதிக்குமவர்களோடு வாசியற ஒக்கவெடுக்கும்படியாய் வந்து விழுந்தது. என் நினைவே நினைவாயிருக்குமவர்களோடு, தங்களுக்கென்ன ஒரு நினைவுண்டாய் நியமிக்கத் தக்கவர்களோடு வாசி யற்றது. [அன்னையரும் தோழியரும் நீரென்னே யென்னாதே நீளிரவும் துஞ்சுவரால்] ''துஞ்சுவரால் என்னுமிது - துஞ்சுதிரால் என்னும் அர்த்தம் பெற்றுக்கிடக்கிறது'' என்று சொல்லுவாருமுண்டு. அன்னையரும் தோழி யருமான நீங்கள், என்னேயென்னாதே - என்பட்டாய் என்னாதே யென்னுதல். அன்றிக்கே அன்னையரும் தோழியரும், நீரென்னே யென்னாதே - இதொருநீர்மை இருக்கும்படியே! என்னே! என்னாதே. அவன் தன்னைப் பொகட்டுப்போய் வேறு சிலவற்றாலே போதுபோக்கித் தன்னை நினையாதேயிருக்கச்செய்தேயும், தான் அவனை யொழியப் போதுபோக்கமாட்டாதே யிருப்பதே! இதொருநீர்மையே! என்னே - இதென்ன ஆச்சர்யம், என்னாதே - இப்படி சொல்லாதே. ''நிறைநீர நீரவர் கேண்மை பிறைமதிப் பின்னீரபேதையார் நட்பு''. [நீளிரவும் துஞ்சுவரால்] எனக்கு உறங்காமையே ஸ்வபாவமாம்படி, நெடிதானராத்ரியெல்லாம் அவர் களுக்கு உறங்குகையே ஸ்வபாவமாய்விட்டது. [காரன்னமேனி] ஒருநீர்ச்சாவியிலே ஒரு பாட்டம் வர்ஷித்தாப்போலே குளிரும்படியான வடிவையுடையவனுமாய், *தாஸாமாவிரபூத்* என்கிறபடியே முன்பு உதவிப்போந்தவனும் வருகிறிலன். 'தாஸாம்'' என்கிறது - அவர்கள் பூர்வாவஸ்தையைப் பற்றவிறே. [நங்கண்ணனுமவாரானால்] பெண்களுக்கே உதவிப் போந்தவனும் வருகிறிலன். [பேரென்னை மாயாதால்] அவனோடு ஒவ்வாதின்றதே! பேரும். அவன் வருகிறிலன், இது போகிறதில்லை. நான் கார்யத்திலே முடிந்தேனாயிருக்கச்செய்தேயும் ''இன்னாள், இன்னாள்'' என்கிற இப்பேர் என்னை முடிந்தேனாகவொட்டுகிறதில்லை. ஆழ்வா ருடைய திருநாமம் ஸ்ரீவைஷ்ணவர்களுக்கு ஸத்தாஹேதுவானாப்போலே இவர் தமக்கும்

ஸத்தாஹேதுவானபடி. அடியுடைய பேராகையாலே ஸர்வர்க்கும் தாரகமாயிருக்குமே, இவனுடைய அடியுடைமையிறே எல்லாரும் தரிக்கிறது. [பேரென்னை மாயாதால்] சப்தாவசேஷையானேனென்றபடி. [வல்வினையேன்] நான் முடியச்செய்தேயும் என்னை முடிக்கேறைகாதபடி பண்ணும்படியான பேரைப் படைக்கும்படியான மஹாபாபத்தைப் பண்ணினேன். [பின்னின்று] நான் முடியச்செய்தேயும் இப்பேரானது எனக்குப்பின்னும் நின்று முடிக்கேறுகை வொட்டுகிறதில்லை. வருகிறபோது ஒக்கவந்தால், போகிறபோதும் ஒக்கப்போக வேண்டாவோ. "நாமரூபே வ்யாகரவாணி" "நாம ரூபஞ்ச பூதாநாம்" என்று ஒக்கச்சொல்லக் கடவதிறே. முற்பட வந்தார்க்கு முற்படப்போக வேண்டியிருக்க, பிற்படவும் போகலாகாதோ?

பின்நின்றகாதல்நோய் நெஞ்சம்பெரிதடுமால்*
முன்நின்றிராவூழி கண்புதையமூடிற்றால்*
மன்நின்றசக்கரத்து எம்மாயவனும்வாரானால்*
இந்நின்றநீளாவி காப்பாரார்இவ்விடத்தே. (6)

ஈ.—ஆறும்பாட்டில், விரஹவ்யஸநம் செல்லாநிற்க, ராத்ரியுமாய் ரக்ஷகனும் வந்து தோன்றுவான் வாராதொழிந்தால் முடியப்பெறுநிற்கிற என்னை ரக்ஷிப்பார் ஆர்? என்கிறாள். [பின்நின்ற என்று தொடங்கி] - விடாதேதொடர்கிற காதலாகிற வ்யாதி நெஞ்சை மிகவும் நோவுபடுத்தாநின்றது; ராத்ரியாகிற கல்பம் முன்னே நின்று பதார்த்தங்களும் தோற்றாதபடி கண்ணை மறையாநின்றது. [மன்நின்றசக்கரத்து எம்மாயவனும் வாரானால்] - ஆர்த்தத்ராணார்த்தமாக எப்போதும் கை கழலாநேமியானும் அத்யாச்சர்ய பூதனுமான க்ருஷ்ணன் வருகிறிலன். ஆபத்ஸகனாகத்திலனன்று, தேஜோரூபமான திருவாழியைக் கொண்டு பகலை இரவாக்கின அத்யாச்சர்யபூதனான க்ருஷ்ணன், திருவாழியை விட்டு இரவைப் பகலாக்கிக்கொண்டு தோற்றுகிறிலன் என்று கருத்து. [நீளாவி காப்பாரார்] - ஆர்த்தநசையிலும் முடியாதே என்னை நோவுபடுத்தாநின்றுள்ள இவ்வளவாகிற ஆவியைப் போக்குவார் ஆர்? என்றுமாம்.

இ.—ஆறும்பாட்டில், விரஹவ்யஸநம்செல்லாநிற்க, ராத்ரியுமாய ரக்ஷகனுளவனும் வாராதொழிந்தால், முடியப்பெறுதப்ராணனை ரக்ஷிப்பாராரென்கிறாள். [பின்நின்றகாதல்நோய்] - புகலிடம்புக்குப பின்னுட்டிக்கொண்டுதிரிகிற ப்ரேமவ்யாதியானது. இதுக்கு இடைந்தால் வேறு ஒதுங்கவிடமில்லைபாநிரா நின்றது. [நெஞ்சம்பெரிதடுமால்] - நெஞ்சை மிகவும் நோவுபடுத்தாநின்றது பாதகம் பாத்யத்துளவனென்றென்கை. அக்நிபோல், தனக்கு ஆச்ரயமான நெஞ்சை தக்தமாக்காநின்றது. [முன்னின்று இத்யாதி] - பதார்த்தங்கள் தோற்றுதபடி முன்னேநின்று ராத்ரியாகிறகல்பம் கண்ணைமறையாநின்றது. ப்ரேமவ்யாதியும் ராத்ரியும் முன்பும்பின்புமாய் க்ருதஸங்கேதங்களாய் நலிகிறபடி உட்கண்ணுமழிந்து புறக்கண்ணுமழிந்தது. க்ராஹகமுமாய் ப்ரகாசகமுமான கண்ணை, க்ராஹ்யமானவிருள் மறையாநின்றது. [மன்னின்ற சக்கரம்] - ஆர்த்தத்ராணார்த்தமாக எப்போதும் கைகழலாநேமியானுமிருக்கிறவன். இவ்விருள் போக்குகைக்கு ஆயுதமெடுக்கவேண்டா வென்கை. [எம்மாயவனும்] - ஆபத்ஸகத்தினன்று ப்ரகாச த்ரவ்யமான திருவாழியைக்கொண்டு தமஸ்ஸை யழைக்குமவன். நிவர்த்தகத்தைக்கொண்டு நிவர்த்யத்தை யழைக்குமவனுக்கு, அத்தைக்கொண்டு நிவர்த்யத்தைப் போக்கத்தட்டில்லையிறே. எம்மென்று - க்ருஷ்ணாவதாரத்தில் தமக்குண்டான அஸாதாரண்யத்தைச் சொல்லுகிறார் [வாரானால்] - ப்ரதிஜ்ஞையழிந்து விருத்தத்தை யநுட்டிக்கவேண்டா, வந்து வடிவைக்காட்டவமையுமென்கை. வருகைக்கு இச்சையில்லாமைபோக்கி, "வருவோம்" என்றால் அருமையில்லையிறே. [இந்நின்ற நீளாவி] - இப்படியே முடியாதே நோவுபடுத்தாநின்றுள்ள உயிராகிற சத்ருவைப் போக்குவார்? முடியுமளவிலும் நூறேபிராயமாயிருக்கிற ஆத்மவஸ்துவைப்போக்கி ரக்ஷிப்பாரார்? "அச்சேத்யோऽயமதாஹ்யோऽயம்" என்கிறவசனத்தைக் கொண்டு தன்னை முடியாததொன்றாகநினைத்து நலியாநின்றது. "பிரிவிலும்முடியாத என்னுயிர்ப்பகையை நீக்கி, என்னை நோகவுவாரார்" என்று ஒருதமிழன் இட்டுவைத்தான். [இவ்விடத்தே] - ஸர்வரக்ஷகனும் உதவாத தசையிலே.

௬.—ஆறாயிரப்படி. விரஹவ்யஸநமும் செல்லாநிற்க, ராத்ரியுமாய் ரக்ஷகனானவனும் வாராதொழிந்தால் முடியப்பெறாத ப்ராணனை ரக்ஷிப்பாராரென்கிறாள்.

[பின்னின்றகாதல்நோய்] புக்கவிடம்புக்கு வடிம்பிட்டு நலிகிற ப்ரேமவ்யாதியானது. இடைக்கொதுங்குகைக்கு ஒரு நிழலில்லாதபடியிருக்கை. [நெஞ்சம்பெரிதடுமால்] நெஞ்சை மிகவும் நோவுபடுத்தாநின்றது. நெருப்பானது சருகினை வேவப்பண்ணி, பின்னையிறே புறம்பேபோய்ச்சுடுவது; அப்படியே தான் கிடக்குமிடத்தை மிகவும் நலியாநின்றதாயிற்று. [முன்னின்று இராவூழி] ப்ரேமவ்யாதியும் ராத்ரியாகிற கல்பமும் தன்னிலே ஸங்கேதித்து வந்தாற்போலே இராநின்றது. "நான் பின்னிட்டுவருகிறேன், நீ முன்னே தப்பாமே சூழ்ந்து கொள்" என்று வருவாரைப்போலே வந்தது எதிரிகள் எளியரானால் அவர்கையில் வில்லைப் பறிப்பது நோவுபடுத்துவதாய்க்கொண்டு பரிபவிப்பாரைப்போலே, இத்தலையில் எளிமை கண்டு ராத்ரியாகிறவூழி, முன்னே நின்று கண்ணைமறையாநின்றது. உட்கண்ணைக் காதல் மறையாநின்றது. கட்கண்ணை ராத்ரி மறைத்தது. [கண்புதையமூடிற்றால்] க்ராமகுருமாய் ப்ரகாசகமுமாயிருக்கிற சக்ஷுரிந்த்ரியத்தை, க்ராஸ்யமான இருள் வந்து மூடாநின்றது. அன்றிக்கே இருளோடொத்த நிறத்தையுடையவன் வந்து முன்னே நின்றாலும் காணவொண்ணாதபடி, இராவூழி கண்ணை மறையாநின்றதென்னவுமாம். [மன்னின்ற இத்யாதி] "எப்போதும் கைகழலாநேமியான்" என்கிறபடியே, ஆச்ரிதர்க்கு விரோதிகளுண்டானபோதாக ஆயுதமெடுக்கப் பார்த்திராதே, எப்போதுமொக்கக் கையிலே விடாதேகொண்டிருக்குமாயிற்று. [எம்மாயவனும்] ப்ரகாசத்ரவ்யத்தையிட்டுத் தமஸ்ஸை அழைக்கவல்ல ஆச்சர்யபூதன். நிவர்த்தகத்தையிட்டு நிவர்த்யத்தை அழைக்குமவனுக்கு, நிவர்த்தகத்தையிட்டு நிவர்த்யத்தை நிவர்த்திப்பிக்கத் தட்டுண்டோ? [வாரானால்] இங்கு ஸங்கல்பம் அரியவேண்டா, வருவதாக நினைக்கவமையும். *ஸம்பவாம் யாத்மமாயயா.* வருவதாக இச்சிக்கவமையும். "ஆயுதமெடேன்" என்று ஆயுதமெடுக்கையும், ப்ரகாசத்ரவ்யத்தையிட்டுத் தமஸ்ஸைப் போக்கக் கடவதென்கிற மர்யாதையைக் குலைக்கையுமாகிற இவைவேண்டா, தான் வரவமையும்; நிவர்த்தக ஸ்வபாவத்தாலே நிவர்த்யம் தன்னடையேபோம் [இன்னின்றநீளாவிகாப்பாரார்] முடியவேண்டுமளவிலே நூறேபிராயமாயிருக்கிற இவ்வாத்மவஸ்துவை முடித்து நோக்குவாரார். *அச்சேத்யோயமதாஹ்யோயம்* என்கிற வசநத்தைக்கொண்டு நின்று வழக்குப்பேசாநின்றதாயிற்று ஆத்மவஸ்து. இத்தைமுடித்து நம்மை நோக்குவார் ஆர்? என்கிறதென்று இப்படி நூறுகைசொன்னாலுமன்றே, ஒருதமிழன் இச்சப்தத்துக்குத் தாத்பர்யமாக இட்டுவைக்கிறான் "பிரிவிலும் முடியாத என்னுயிர்ப்பகையை நீக்கி, என்னை நோக்குவாரார்" என்று. [இவ்விடத்தே] ஸர்வரக்ஷகனானவனும் உதவாத இவ்வவஸ்தையில் இனிமுடித்து பிழைக்கை விதேயமோ.

காப்பாரார் இவ்விடத்துக் கங்கிருளின் நுண்துளியாய்*
சேட்பாலதூழியாய்ச் செல்கின்ற கங்குல்வாய்*
தூப்பாலவெண்சங்கு சக்கரத்தன் தோன்றானால்*
தீப்பாலவல்வினையேன் தெய்வங்காளென்செய்கேனே? (7)

௭.—ஆறாயிரப்படி: ராத்ரியாகிற யுகம் செல்லாநிற்கவும் எம்பெருமான் வந்துதோற்றாதொழிந்தவாறே அநிமிஷராகையாலே உறங்காதிருப்பாரைப்போலே இவ்வவஸ்தையில் உறங்காதே நிர்மலமாய் புகைபடுமாகையாலே "தெய்வங்காள் என்செய்கேன்" என்று தன் செயலறுதியாலே சொல்லுகிறாள். [கங்கிருள் என்று தொடங்கி] - ராத்ரி இருளும் சிறு துளியுமாய் நெடுமை ஸ்வபாவமான கல்பமாய் முடிவின்றிக்கே செல்லுகிற இக்காலத்தில். மருங்குலை 'மருங்கு' என்றாப்போலே கங்குலை 'கங்கு' என்கிறது. [தூப்பால என்று தொடங்கி] - நிர்மலமாய் வெளுத்திருந்துள்ள ஸ்ரீபாஞ்சஜந்யத்தையும் திருவாழியையும் ஏந்தி இவ்வந்தகாரமெல்லாம் போம்படி வந்து தோன்றுகிறிலன். [தீப்பாலவல்வினையேன்] - அவன் அங்கீகரியாதபடி பண்ணவற்றான மஹா பாபத்தையுடையேன்.

இ.—ஏழாம்பாட்டில், ராத்ரியாகிறயுகம் செல்லாநிற்க, அவன்வந்துதோற்றாதொழிகையாலே, அநிமிஷராகையாலே யுறங்காததேவதைகளைக்குறித்து, நான் என்செய்கேனென்கிறாள். [காப்பாராரிவ் விடத்து] - ரக்ஷகன் உதவாததசையில் இனி பாதகர் நோக்கவோ, நாம் நோக்கிக்கொள்ளவோ? அவனத்தை 'எனக்கு'' என்கையேயோபாதியிறே. அவனுடையரக்ஷணத்தை நாம் ஏறிட்டுக்கொள்ளுகை. [கங்கிருளினுண்டுளி] - நுண்டுளி - சிறுதுளி தடித்தவிருளையும் சிறுதுளியையுமுடைத்தாய். [சேட்பால இத்யாதி] நெடுமையே ஸ்வபாவமாயிருக்கிற கல்பமாய்க்கொண்டு முடிவின்றிக்கே செல்லுகிற ராத்ரியில். அதவா, மருங்குலை - ''மருங்கு'' என்னுமாபோலே, கங்குலை - ''கங்கு'' என்று குறைத்தாய், ராத்ரியில் இருளென்றுமாம்: அப்போது, கங்குல்வாயென்று - காலபரமாய், இக்காலத்திலே யென்னக்கடவது: ''ஸப்தராத்ரம் தசராத்ரம்'' என்னுமாற்போலே. [தூப்பால இத்யாதி] - இவ்விருளைப்போக்குகைக்கு சந்த்ராதித்யர்கள் சேரவுதித்தாற்போலே கையுமாழ்வார்களுமாய்வந்து தோன்றுகிறிலன். ''சந்திரமண்டலம்போல் தாமோதரன்கையில்'' என்றும், ''மேருவிற்செஞ்சுடரோன் திருமால்திருக்கைத்திருச்சக்கர மொக்கும்'' என்றும் சொல்லக்கடவதிறே. அவ்விருளைப்போக்கும்போது இவர்கள் வேணுமென்கை. தூ - தூய்மை. பால - ஸ்வபாவமாக உடைத்தாகை. ரக்ஷணபரிகரங்களை தரித்து ரக்ஷணத்திலே தீக்ஷித்திருக்கிறவனும் வருகிறிலன். [தீப்பாலவல்வினையேன்] - தீமையே ஸ்வபாவமாகவுடைத்தாய், போக்கப் போகாதபடியான பாபத்தைப் பண்ணினேன். ரக்ஷகனும் அநாதரிக்கும்படி பண்ணின பாபமென்கை. [தெய்வங்காளென்செய்கேனோ] - தேவதைகளுக்கும் இவளுக்கும் அநிமிஷத்வத்தாலே ஒருஸாம்யமுண்டு. அவர்கள் பிறப்பே அநிமிஷர், இவள் விரஹத்தாலே அநிமிஷை. தோழிமாரும் உறங்குகிறஸமயத்திலே இவர்கள் உணர்ந்திருக்கையாலே, தன் ஆர்த்திபொறுக்கமாட்டாமை யுறங்காதிருக்கிறார்களாகக்கொண்டு, ''இவர்களிற்காட்டில் நமக்கு வேறு உறவுண்டோ'' என்று, என்செய்கேனென்று - தனசெயலறுதியை அவர்களுக்கு அறிவிக்கிறாள்.

ஈடு.—ஏழாம்பாட்டு. ராத்ரியாகிற யுகம் செல்லாநிற்க அவன் வந்து தோற்றாமை யாலே; அநிமிஷராகையாலே உறங்காத தைவங்களைக் குறித்து, நான் என் செய்வேனென்கிறாள்.

[காப்பாராரிவ்விடத்து] ரக்ஷகனானவன் உதவாதிருக்க, இவ்வளவில் பாதகராறா ரக்ஷகராகவோ. ரக்ஷகனானவன் வரவுதாழ்த்தாலும் இப்புத்தி பிறவாதிருக்கக் கடவ இவள் இப்போது ''காப்பாரார்'' என்று இவ்வார்த்தைசொல்லும்படி காணும் பிறந்த நசாவிசேஷம். *சரைஸ்து ஸங்குலாம் க்ருத்வா லங்காம்* - திருவடி, பிராட்டியை, ''பெருமாள் பாடே .. .. ..  யெழுந்தருளவமையாதோ?'' என்ன; ராக்ஷஸஸங்குலமானவித்தை ராமசரஸங்குலமாகக் காண் நாம் போவது, வெற்றுமனிசர்முகத்திலே விழித்துப்போகவோ? *பரபுரார்த்தந:* அவரோடே விரோதித்து இதுக்குமுன்பு ஜீவித்துப்போந்தும் ஒருபடையுண்டோ? *மாம் நயேத் யதி* - *நயாமி பரமாமகதிம்* என்கிறவர் இரண்டு வார்த்தை சொல்லுவரோ? *காகுத்ஸ்த்த * இக்ஷ்வாகுகுலவிரோதிகளையும் போக்குங்குடியிலே பிறந்தவர் ஸ்வகார்யத்தில் சோர்வரோ? *தத்தஸ்ய ஸத்ருசம்பவேத்* - அவர்க்கு அநுரூபமானவற்றைச் செய்து போகக்கடவ நாம், நம்முடைய ஆர்த்தியை பரிஹரிக்கைக்காக அவர்க்கு நிறக்கேடான வற்றைச் செய்யவோ? ''ராமமஹிஷியை ஒரு ராக்ஷஸன்பிரிக்க, அவன் சரக்குப்போனான்'' என்னுகல், 'ஒருகுரங்கு மீட்டது'' என்றுதல் செய்கையாகிறவித்து, அவர்விலைலிக்க வகை யாங்காண்; அவர்வபசத்துக்குக் கொத்தையாங்காண். அவர்விஷயத்தில் ராவணன் செய்ததை நாமும் செய்யவோ? ராமபத்தந்த ''என்னது'' என்றிரேறு ஒப்பாமறிறு அவருடைய ரக்ஷணத்தைத் தந்தலையிலே ஏறிட்டுக்கொள்ளுமவர்கள். எதிரேறும் பயமதாமுக் களுண்டானாலும் அஞ்சாதே யிருக்கக்கடவ இவள் பிரியாற்றாமைக்கு அஞ்சனமூறியே இவ்வார்த்தை சொல்லிற்று. *கஜம் வேத்யாதி, நாஹரயதி ஸந்த்ராஸம்* ஸ்வருபப்ராப்தமான ஸத்ரீத்வம் போயிற்று. *பாஹூ ராமஸ்ய ஸம்ச்ரிதா* பயமேறதக்கதுக்கு அஞ்சவ கவோர கண்ணயத்துக்குள்ளே யிருப்பார். ஆனாத்திகள் ஸம்ஹாதிர்களைவல்லவிப்பயிறு.

இ.—எட்டாம்பாட்டில், ராத்ரியும் பாதகமாய் ரக்ஷகனும் வாராதிருக்கவும், குளிர்ந்த தென்றலானது நலியாநின்றதென்கிறாள். [நெய்வங்காளென்செய்கேன்] - வேறு உறங்காதிருப்பாரில்லாமையாலே, பின்னையும் தன்செயலறுதியாலே சொல்லுகிறாள். [ஓரிரவேழூழியாய்] - கீழ்ச்சொன்ன கல்பம் "ஒருராத்ரிமாத்ரம்" என்னும்படி, ஒருராத்ரிதானே அநேககல்பங்களாகாநின்றது. ஸௌபரி போகத்துக்காக பலவடிவுகொண்டாப்போலே, ராத்ரியும் நலிகைக்காக அநேகம்வடிவுகொண்டது. [மெய்வந்துநின்று] - ப்ரஸங்கத்தாலே வந்துநலிகையன்றிக்கே, புத்திபூர்வமே, "முடிக்கக்கடவதுபோகேன்" என்று ஆக்ரஹமுடையாரைப் போலே நின்று. ராவணன் இடம்பார்த்து வந்தாப்போலே, 'விரஹதசை' என்று அறிந்துவந்து நலியாநின்றது. [எனதாவி மெலிவிக்கும்] - நலிகைக்கு ஆச்ரயமில்லாதபடி சென்றற்ற உயிரை நலியாநின்றது. [கைவந்தசக்கரத்து]. நினைத்தபடி விதேயமான திருவாழியை உடைய. பாவஜ்ஞமான பரிகரத்தையுடையவன்கிடீர். [என்கண்ணனும்] - ஆச்ரிதர்க்காகத் தன் ப்ரதிஜ்ஞையை யழியமாறுமவன் [வாரானால்] - கையிற்திருவாழியையிட்டு இருநினைத்துணித்து தன் வடிவைக் காட்டுகிறிலன். [தைவந்ததண்தென்றல்] - குளிர்ந்தகாலத்திலேவந்த குளிர்ந்ததென்றல். தைவருகையாவது - தடவுகையாய். காந்தனுடைய ஸ்பர்சத்துக்கு ஸ்மாரகமான தென்றலென்றுமாம். [வெஞ்சுடரில்தானடுமே] - சுடரென்று - லௌகிகாக்நி, வெஞ்சுடரென்று - அதிற்காட்டில் கொடிய நரகாக்நி. அதிற்காட்டிலும் நலியாநின்றது. நரகாக்நியிற்காட்டில் விச்லேஷதசையில் அநுகூல ஸ்பர்சம் கொடியதாயிறேயிருப்பது. அத்யுஷ்ணமான நெருப்பிற்காட்டில் சுடாநின்றதென்கை.

ஈடு.—எட்டாம் பாட்டு. ஏகராத்ரி அநேகயுகமாய் மிகவும் நலியாநின்றது, எம்பெருமானும் வருகிறிலன், அதுக்குமேலே தென்றலும் நலியாநின்றதென்கிறாள்.

[நெய்வங்காளென்செய்கேன்] மற்றும் உறங்காதிருப்பாருண்டாகிலிறே அவர்களைப் பார்த்துச்சொல்லுவது. [ஓரிரவேழூழியாய்] கீழ் "ஊழியாய்" என்றவிடம் - ராத்ரிமாத்ரமாய் நின்று நலிந்ததென்னும்படி, இது அநேககல்பமாய் நலியாநின்றது. ஸௌபரி, போகத்துக்கு அநேகம் வடிவுகொண்டாப்போலே, இது பாதிக்கைக்கு அநேகம் வடிவு கொள்ளாநின்றது. [மெய்வந்துநின்று] ராவணன் இடம்பார்த்து வந்தாப்போலே விரஹதசையறிந்து நலியாநின்றது. சச்வான்மர்யாதை அழிக்கவொண்ணாமை வந்தார்த்தமன்றிக்கே, தனக்கே ஆக்ரஹமுடையாரைப்போலே மெய்யே முன்னேவந்து நின்று. [எனதாவி மெலிவிக்கும்] போனவுயிரை மீளக்கொடுத்து நலியவற்றாயிற்று. "சென்றற்றது" என்னும்படியிருக்கிற என்னுடைய ஆவியையுண்டாக்கி நலியாநின்றது. மோர்க்குழம்பு கொடுத்துத்தேற்றி, விடுநகங்கட்டி நலிவாரைப்போலே. [கைவந்த சக்கரத்து] இவ்வளவுகத்தைப் பரிஹரிக்கைக்குப் பரிகரமில்லாமல்தான் இருக்கிறதோ? அழையாதிருக்கச் செய்தேயும் நினைவறிந்து கையிலே வந்திருக்கும் திருவாழியையுடையவன். அற விதேயமான பரிகரத்தை யுடையவனென்றபடி. பாவஜ்ஞமாய்க் காரியஞ்செய்யும் பரிகரத்தையுடையவன். *பாவஜ்ஞேந* ஸ்ரீபஞ்சவடீயில் சமைக்கும்போது இளையபெருமாள்; நமக்கு ஓலக்கங்கொடுத்திருக்குமிடம் பண்ணும்படியும், அக்னிசாலை சமைக்குமிடமும், இவையிறே பெருமாள் அருளிச்செய்வது. பிராட்டியுந் தாமும் ஏகாந்தமாக இருக்கும்படிகள் இவருடன் தாம் அருளிச்செய்யாரே; அவையடையக் கருத்தறிந்து செய்வாராயிற்று. அவர் தாஞ்செய்கின்றன கொண்டு ஒன்று பேசினால் இவரும் செவிகண்ணுக் கேட்டுச் சமைத்ததின *க்ருதஜ்ஞேந* வருத்தி இவர் நினைவைப் பின்செல்லமாத்ரமன்றிக்கே; அறுபத்தறுபிரமாண்டு மலடுநின்று பின்னைப்பெற்ற சக்ரவர்த்தி, பெருமாளுக்குப் பொருந்துமிடம்பார்த்து மாளிகைசமைத்து முன்பு செய்து போந்த கட்டளைகளறிந்து, அப்படியே செய்தாராயிற்று. *தர்மஜ்ஞேந* இதுதான் "தம்பியாயிருந்து இப்படிச்செய்தார்" என்று குணமாகையன்றிக்கே, "இது கர்த்தவ்யம்" என்றுசெய்தார். "உஜ்ஜீவநஹேதுவான அநுஷ்டேயகர்மமிது" என்று செய்தார். *த்வயா புத்ரேண* போன ஐயர்க்கு ப்ரியஸ்தாநகர் நீரேயிறே. "நாம் உள்ளதனையும் இவர்களுடைய ரக்ஷணம் இப்படி செல்லுமிறே, நமக்குப்பின்பு இவர்க்கு ரக்ஷகரார், என் செய்யக்கடவது" என்று இதுவேயாயிற்று அவர்க்கு எப்போதும் நெஞ்சாறல்; அவர் செய்யும் வற்றை நீர் செய்கையாலே அவர்க்கு துக்கமொழிந்ததாகிறதிறே. *தர்மாத்மா* ஐபருமொரு

...ரோ! தாம் பரமதார்மிகரன்றோ; தாம் இருந்த நாளும் நமக்குவேண்டும் ரக்ஷணங்கள் பண்ணி, தாம்போன நாளைக்கும் தண்ணீர்ப்பந்தல் வைப்பாரைப்போலே உம்மை வைத்துப்போவதே! *ஸம்வ்ருத்த: பிதா மம* நாம் ஐயரை இழந்திலோமிறே, நீர் இழந்தீராகிலிக்கனேயிறே. *ராமஸ்ய தக்ஷிணோ பாஹு:* என்கிறபடியே விஜயமாய்க் காரியஞ்செய்யும் பரிகரத்தையுடையவர். [கண்ணன்] ஸ்ரீபீஷ்மரைத் தொடருகிறபோது கையிலே வந்திருந்ததிறே திருவாழி. ஸ்ரீபீஷ்மர் நேடும்போது பொருதபடியாலே அர்ஜுநன் இளைத்தான், அவன் இளைத்தவாறே ஸர்வேச்வரன் தன்ப்ரதிஜ்ஞையை மறந்தான். தேரில் நின்றும் குதித்துத் திருவாழியைக் கொண்டு தொடர்ந்தான். வந்துகொண்டருளீர் என்கிறான். *ஏஹ்யேஹீத்யாதி* என்றும் ஆனைமுற்றுக்கரும் சேதமில்லையே! இச்சீரிச்சிவந்த கண்ணழகை அநுபவிக்கப்பெற்றால். *ப்ரஸஹ்ய* தேவர்க்கும் வீரத்துக்கும் தோலேன், என்கையில் ஆயுதத்தைப்போகடச்சொல்லித் தலைமை யறுத்தருளீர். *லோகநாத* வீரத்துக்குத்தோலேனுகிலும் முதன்மைக்குத் தோற்பனிறே. [என்கண்ணன்] ஆச்ரிதர்க்காக ப்ரதிஜ்ஞையை அழியமாறுமவனிறே ஆச்ரிதரிலே ஒருவர்க்குச் செய்தது எல்லார்க்குமாயிருக்குமே. "ஆச்ரிதர்க்காக ப்ரதிஜ்ஞையையழியமாறும்" என்னுமிது தன்சமாகவிறே இவனைப்பற்றுகிறார் பற்றுகிறது. தனக்கென்னவும் சில ஸ்வபாவமாயிருக்குமாகில் இவனைப் பற்றுவார்க்குப் ப்பலமில்லை. [தைவந்ததண்தென்றல்] குளிர்ந்த காலத்திலே வந்த தென்றலென்னுதல்; தைவருகையாவது - தடவுகையாய், சாத்தனுடைய கரஸ்பர்சத்துக்கு ஸ்மாரகமாயிராநின்றதாயிற்றுக் குளிர்ந்த தென்றல். "தான்சென்று மண்மகளைத் தைவந்தான்" என்று ப்ரயோகிக்கார்களிறே. [வெஞ்சுடரில் தானடுமே] வெவ்விய சுடரிற்காட்டில் அடுமென்னுதல், சுடர்போலே நலியாநின்றதென்னுதல். லௌகிகைக்கிற்காட்டில் நரகாக்கித்தள்ள வாசிபோருமிறே பிரிந்த ஸமயத்தில் அநுகூலபதார்த்தத்துக்கு.

**வெஞ்சுடரில்தானடுமால் வீங்கிருளின் நுண்துளியாய்***
**அஞ்சுடரவெய்யோன் அணிநெடுந்தேர்தோன்றுதால்***
**செஞ்சுடர்த்தாமரைக்கண் செல்வனும்வாரானால்***
**நெஞ்சிடர்தீர்ப்பாரினியார்? நின்றுருகுகின்றேனே. (9)**

ஒ.—ஒன்பதாம்பாட்டில், ராத்ரியும் மிகவும் பாதியாநின்றது. வரக்கடவதான ஸூர்யோதயமும் நமக்கென்றவாறே ப்ரார்த்த்யமாய் விட்டது, எம்பெருமானும் வந்து தோன்றுகிறிலன். நான் நின்று நோவுபடுகிற்கின்றபோக்கி என்னுடைய பாதைபோக்கக் கடவார் யாருண்டோ இனி? என்கிறாள். [வீங்கிருள் என்று தொடங்கி] - வீங்காநின்றுள்ள இருளையும் நுண்துளியையுமுடைத்தாய்க்கொண்டு ராத்ரியானதுதான் நெருப்பிற்காட்டில் நலியாநின்றது. தோற்றரவிலே இருளைப்போக்கி நம்முடைய க்லேசஹாநியைப் பண்ணவல்ல அழகிய ஒளியோடேகூடின ஆதித்யனுடைய அழகிய தேரும் தோன்றுகிறதில்லை. [செஞ்சுடர் என்று தொடங்கி] - இங்ஙனே துஸ்ஸஹமானதசை செல்லாநிற்க, சிவந்த ஒளியை யுடைத்தாய்த் தாமரைப்பூப்போலேயிருக்கிற அழகியதிருக்கண்களாலே குளிரநோக்கிக் கொண்டு ச்ரிய:பதியானவனும் வந்து தோன்றுகிறிலன்.

இ.—ஒன்பதாம்பாட்டில், ராத்ரி நலியாநின்றது, ஸூர்யோதயமும் "நமக்கு" என்றவாறே ப்ரார்த்த்யமாய் விட்டது, ரக்ஷகனானவனும் தோற்றுகிறிலன், என்னுடைய மநோது:க்கத்தைப் போக்குவாராரினி வேறென்கிறாள். [வெஞ்சுடரில்தானடுமால் - வீங்கிருளின் நுண்துளியாய்] - வளர்ந்த இருளும் சிறுதுளியுமாய், ராத்ரியானது நெருப்பிற்காட்டில் நலியாநின்றது. ராவணன் மாரீச ஸஹாயனாய்வந்தாப்போலே, ராத்ரி சிறுதுளியை ஸஹகாரமாகக்கொண்டுவந்தது. இரண்டையும் போகத்துக்கு வர்த்தகமாகச் சொல்லக்கடவதிறே [அஞ்சுடர இத்யாதி] - தன்னுடைய தோற்றத்திலே இருளைப்போக்கி து:க்கநிவ்ருத்தியைப்பண்ணவல்ல ஒளியோடேகூடின ஆதித்யனுடைய அழகிதான உதயஸூசகமான தேரும் தோன்றுகிறதில்லை. [செஞ்சுடர் இத்யாதி] - இத்தசையில், புண்டரீகாக்ஷனான ச்ரிய:பதியும் வருகிறிலன். சிவந்த ஒளியையுடைய தாமரைப்பூப்போலேயிருக்கிற திருக்கண்களையுடைய

ச்ரியःபதியும் வருகிறிலன். இந்த தூர்த்தசையிலே குளிரநோக்கிக்கொண்டு இருவருமாய் வரப்ராப்தமாயிருக்க, அதுகிட்டிற்றில்லை. ஆதித்யன் உதித்தாலும் ராத்ரி வர ஸம்பாவனையுண்டு, அஸ்தமியாத ஆதித்யன் வருகிறிலன், "பகற்கண்டேன் நாரணனைக்கண்டேன்" என்னக்கடவதிறே. [நெஞ்சிடர்தீர்ப் பாரினியார்] - இனி மநோதுःக்கத்தைப் போக்குவாரார்? ஆந்தரமான தமஸ்ஸைப் போக்கும்போது அவனே வேண்டாவோ; பாஹ்யதமஸ்ஸையிறே ஆதித்யன் போக்குவது. [நின்றுருகுகின்றேனே - நெஞ்சிடர் தீர்ப்பாரினியார்] - விலக்ஷண விஷயத்தைப்பிரிந்தால் உள்ளதொன்று இது - உருகி தர்மிலோபமும் பிறவாதே தரிக்கவும்பெறாதே யுருகாநிற்குமித்தனை.

௯.—ஒன்பதாம்பாட்டு. ராத்ரியும் நலியாநின்றது, ஸூர்யோதயமும் "நமக்கு" என்றவாறே ப்ரார்த்யமாய்விட்டது, ரக்ஷகனானவனும் தோற்றுகிறிலன், என்மநோ துःக்கத்தை இனிப்போக்குவார் ஆரென்கிறாள்.

[வெஞ்சுடரில் இத்யாதி] ராவணன் மாரீசஸஹாயனாய்க்கொண்டு வந்து தோற்றினாப் போலேயாயிற்று நுண்ணியதுளியோடே செறிந்த இருள்வந்து தோன்றினபடி. இரண்டும் போகத்துக்கு ஏகாந்தமாயிருக்குமிறே. "ஒழுகு நுண்பனி" இத்யாதி - வர்ஷாவில் கைக்குள்ளேயடங்க அணைக்கவேணும் இருள்தானே போகவர்த்தகமிறே. [வீங்கிருளின் நுண் துளியாய் - வெஞ்சுடரில்தானடுமால்] வளர்ந்த இருளும், நுண்ணிய பனியும், வெவ்விய சுடரிற் காட்டில் அடாநின்றதென்னுதல், வெஞ்சுடர்போலே அடாநின்றதென்னுதல். இவற்றில் ப்ராதாந்யமேது? என்னில்; - அது வேணுமோ, "பாதகங்களிரண்டுண்டு" என்னவமையாதோ. இனித்தான் இத்திருவாய்மொழி தன்னில் - ராத்ரிவ்யஸநமிறே சொல்லிப் போருகிறது; ஆன பின்பு, இருளுக்கே ப்ராதாந்யமாக வமையுமிறே. [அஞ்சுடர இத்யாதி] இளையபெருமான் அகலநின்றாப்போலேயாயிற்று இது. தன்னுடைய தோற்றரவிலே துக்கவேசத்திபுண்டாம் படியான அழகிய சுடரையுடைய ஆதித்யனும் வருகிறிலன். [தோன்றுதால்] ப்ரளயத்தில் அல்பசேஷமாம்படி தீர்ந்து, "கரையைக்கிட்டினோமோ, கிட்டினோமோ!" என்று பார்ப்பாரைப் போலேகாணும் ராத்ரியெல்லாம் நோவுபட்டு "விடிந்ததோ, விடிந்ததோ" என்று பார்க்கிறபடி. [செஞ்சுடர் இத்யாதி] *தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ* என்று ஆதித்ய மண்டலத்திலே எழுந்தருளியிருக்கிறவனும் வருகிறிலன். ஆதித்யனுடைய வரவுக்கு அருணோதயம் போலே இருப்பதொன்றிறே, அவனுடைய வரவுக்கு ஆதித்யனுடைய தோற்றரவு. சிவந்த சுடரையுடைய தாமரைபோன்ற கண்களையுடைய ஸ்ரீமானும் வருகிறிலன். ஆதித்யன் வந்தாலும் இருள்வர ஸம்பாவனையுண்டிறே, அஸ்தமியாத ஆதித்யனும் வருகிறிலன். அவனுடைய ப்ரகாசமும் ப்ராதேசிகமாயிருக்குமிறே. உபயவிபூதிக்கும் ப்ரகாசத்தைப் பண்ணுமவனிறே இவன். "பகற்கண்டேன் நாரணனைக்கண்டேன்" என்னக்கடவதிறே. [நெஞ்சிடர் தீர்ப்பாரினியார்] ஆந்தரமான தமஸ்ஸைப் போக்குவாரார்? பாஹ்யமான தமஸ்ஸைப் போக்குமவனிறே அவன்; ஆந்தரமான தமஸ்ஸாகிறது விப்ரலம்பத்தின இருளிறே; அத்தைப்போக்கும்போது, நிலவனுமாய் அந்தரங்கனுமானவனே வேணும். "ஞானமாகி ஞாயிறாகி" என்னக்கடவதிறே. [நின்றுருகுகின்றேனே நெஞ்சிடர்தீர்ப்பாரினியார்] விலக்ஷண விஷயத்தில் விச்லேஷம், உருகிற்றுத் தர்மிலோபம் பிறக்கவுமொட்டாது, தரிக்கவுமொட்டாது, முடியவுருகினபடியே நிற்குமித்தனை. "இன்னமொருகால் காணலாமோ" என்னும் நசை முடியவொட்டாது, அப்போதைப் பிறவு ஜீவிக்கவுமொட்டாது.

நின்றுருகுகின்றேனேபோல நெடுவானம்*
சென்றுருகி நுண்துளியாய்ச் செல்கின்ற கங்குல்வாய்*
அன்றொருகால் வையம் அளந்தபிரான் வாரானென்று*
ஒன்றொருகாற் சொல்லாது உலகோ உறங்குமே. (10)

௰.—பத்தாம்பாட்டில், இந்தராத்ரியில் என்னுடைய வ்யஸநத்தைக் கண்டு வைத்தும், அவன் நிறமாக ஒருவார்த்தைசொல்லாதே இந்த லோகம் உறங்குவதே! என்கிறாள். [நின்று என்று

ஒ.—ஒன்பதாம் பாட்டில், த்ரைவிக்ரம வ்ருத்தாந்தாநுஸந்தாநத்தாலே மிகவும் சிதிலனுகா நின்றேன். நான் தரிப்புடையேனும் உன்னை அநுபவிப்பது என்று என்கிறார். [அடியை என்று தொடங்கி] - மஹாபலியை மூன்று அடியை இரந்தபடியும், அந்நிலையிலேநின்றே இரண்டடியாலே த்ரை லோக்யத்தை அகப்படுத்திக்கொண்டு நீ நினைத்ததை முடித்துக்கொண்ட வேண்டப்பாடும். [நொடியும் என்றுதொடங்கி] - அவற்றைச்சொல்லக் கேட்குந்தோறும் என்னுடைய அந்த:கரணம் உன்னுடைய ப்ரஸ்தாவமாத்ரத்திலே கரைந்து உகும். உன்னை அநுஸந்தித்தால் சிதிலனாகைக்கீடான மஹாபா பத்தைப்பண்ணின நான் உன்னை என்று தரித்து அநுபவிப்பது.

இ.—ஒன்பதாம்பாட்டில், த்ரைவிக்ரமவ்ருத்தாந்தா நுஸந்தானத்தாலே மிகவும்சிதிலனுகாநின்றேன், தரித்துன்னை யநுபவிப்பதென் றென்கிறார். [அடியையித்யாதி] - இந்த்ரனிழந்தது த்ரைலோக்யமிறே. "த்ரைலோக்யத்தையும்தா" என்றால் இசையான். 'அடி' என்றால், உதாரனுகையாலே யிசையக்கூடும். என்று அடியையிரந்தான். ஓரடிக்குச்சிறையிட்டுவைக்க 'நினைக்கிறனுகையாலே மூன்றையிரந்தான். [இரந்தவாறும்] - தன்னைத யவனதாக்கித் தானர்த்தியானபடியும். [அங்கே நின்று] - நீரேற்றவிடந் தன்னிலேநின்று. போய்ப்புகுரில், "அக்காலும்வடிவுமன்று" என்று வழக்குப் பேசுவர்களிறே. [ஆழ் கடலித்யாதி] - அபரிச்சேத்யமான கடல்களையும், பஞ்சாசத்கோடி விஸ்தீர்ணையான பூமியையும் ப்ரஹ்ம லோக பர்யந்தமான ஆகாசலோகங்களையும் இரண்டடியாலே முடியும்படியாகத் தலைக்கட்டிக்கொண்ட வேண்டப்பாடும். முக்கியம் - ப்ரதாநமானசெயல். ஸ்வவ்யதிரிக்தங்களையும் திருவடிகளின்கீழே யகப்படுத்துகையால் வந்த ப்ராதாந்யந்தோற்றநின்றபடி. [நொடியுமித்யாதி] - அவைநொடியுமாறு கேட்குந்தோறும். நொடிதல் - சொல்லுதல். நான்சொல்லவேண்டா, குணகதநம்பண்ணுவார் பாசுரங் கேட்குந்தோறும். [என்னெஞ்சம் நின்றனக்கே கரைந்துகும்] - அவாப்தஸமஸ்தகாமனுன நீ ஆச்ரிதார்த்த மாக அர்த்தியானநீர்மையை யநுஸந்தித்து, என்மனஸ்ஸு "இதென்னநீர்மை" என்று த்ரவித்து சிதிலமாகாநின்றது. [கொடியவல்வினையேன்] - ப்ராயச்சித்தஸாத்யமன்று, அநுபவவிநாச்யமன்று. சைதில்யஹேதுவான ப்ரேமத்தையிறே - பாபமென்கிறது. "யந்நாமஸங்கீர்த்தநதோ மஹபயாத்விமோக்ஷமாப்நோதி" என்கிறதிறே யிவர்க்கு பயஸ்த்தாநமாயிற்று. உன்னை தரித்தனுபவிப்பதென்றோ ?

ஈடு.— ஒன்பதாம் பாட்டு. த்ரைவிக்ரமாபதாநத்தை யநுஸந்தித்து அத்தாலே சிதில னுகிற நானுன்னை தரித்து நின்றநுபவிப்பதென் றென்கிறார்.

[அடியை மூன்றையிரந்தவாறும்] - இவையபேக்ஷிக்கமாட்டாதவன்றும், இவற்றின் அதித சிர்தை பண்ணுமளவேயோ. இவையுண்டானாலும் சிறியத்தைப்பெரியது நலியாதபடி நோக்கு வான வனென்கிறது. [அடியை மூன்றையிரந்தவாறும்] - நேராய்ப்போகாமே மூன்றையிரந்த படி. இரண்டடியிரந்தானுகில் அவனைச்சிறை செய்ய விரகில்லையே [அங்கே நின்று] - காடக்க நாலடிபோனானுகில் "க்ருத்ரிமம் பண்ணினுன்" என்று அவனுக்கு வழக்குப்பேசலாயிறே. [ஆழ்கடலித்யாதி] - இவருடைய நெஞ்சைக் கரைக்கவடியிடுகிறபடி. பூம்யந்தரிக்ஷாதிகளடங் கலு மிரண்டடியிலேயடங்கும்படிக்கீடாக அளந்து தலைக்கட்டிக்கொண்டபடியும். [முக்கிய மும்] - முக்யமும் - வேண்டப்பாடும். அதாவது - ஆச்ரிதார்த்தமாகப்பண்ணின வஞ்சனையால் வந்தவேண்டப்பாடிருக்கிறபடி. அன்றியே, ஸ்வவ்யதிரிக்தங்களும் தன்திருவடிகளின் கீழே யகப்படுகையாலே வந்தவேண்டப்பாடும். [நொடியுமாறித்யாதி] - நொடிதல் - சொல்லுதல். திருவுலகளந்தருளின வ்ருத்தாந்தத்தை வ்யாஸாதிகள் சொல்லாநிற்பர்கள். அவர்கள் சொல் லும் ப்ரகாரங்களைக் கேட்குந்தோறும் நான் சொல்லவேண்டா. [என்னெஞ்சம் நின்றனக்கே கரைந்துகும்] - மஹாபலியைப்போலே ஔதார்யம் கொண்டாடுகிறேனல்லேன். இந்த்ரனைப் போலே ராஜ்யமானுகிறேனல்லேன். என்னுடைய மனஸ்ஸானது உன் பக்கலிலே சிதிலமாய் மங்காநின்றது. [கொடிய வல்வினையேன்] - *யந்நாமஸங்கீர்த்தநதோ மஹாபயாத் விமோக்ஷமாப்நோதி* என்கிறபடியே திருநாமஸங்கீர்த்தநம் மஹாபாதகங்களையும் போக்குமென்று சொல்லாநிற்க, அதுதானே சைதில்யஹேது வாம்படி மஹாபாபத்தைப் பண்ணினேன். [உன்னையென்றுகொல் கூடுவதே] - உன்னை நான் தரித்தநுபவிப்பதென்றோ ? அநுபவிப்ப வந்துகிட்டுவதென்றோ ?

கூடிநீரைக்கடைந்தவாறும் அமுதந்தேவருண்ண* அசுரரை
வீடும்வண்ணங்களே செய்துபோனவித்தகமும்*
ஊடுபுக்கெனதாவியை யுருக்கியுண்டிடுகின்ற* நின்றன்னை
நாடும்வண்ணஞ்சொல்லாய் நச்சுநாகணையானே! (10)

ஒ.—பத்தாம்பாட்டில், உன்னுடைய ஸமுத்ரமதநவைசித்ர்யத்தை அநுஸந்தித்து சிதிலனாகாநின்றேன், தரித்து நின்று உன்னை அநுபவிக்கும்விரகு சொல்லவேணுமென்று ப்ரார்த்திக்கிறார். [கூடிநீரை என்றுதொடங்கி] - அஸுரர்களோடே கூடிநின்று கடலைக் கடைந்தருளினபடியும், ப்பலரூபமான அம்ருதத்தைத் தேவர்கள்புஜிக்க அஸுரர்கள் அந்த அம்ருதத்தை விடும்படியாக அவர்கள் எதிரே ஒருஸ்த்ரீவேஷத்தைக்கொண்டு அவர்கள்தொடரப் போனவிஸ்மயமும். [ஊடுபுக்கு என்று மேலுக்கு] - உள்ளேபுக்கு என்ஆத்மாவை உருக்கிமுடிக்கிற உன்னை, திருவநந்தாழ்வான் உன்னோடே நித்யஸம்ச்லேஷம்பண்ணுமாப்போலே, பூர்ணமாக தரித்துநின்று அநுபவிக்கும் விரகு சொல்லாய்.

இ.—பத்தாம்பாட்டில், ஸமுத்ரமதநவைசித்ர்யத்தை யநுஸந்தித்து சிதிலனாகாநின்றேன், உன்னை தரித்து நின்றநுபவிக்கும் விரகுசொல்லவேணுமென்று ப்ரார்த்திருக்கிறார். [கூடி] - "ப்பலமொக்கக் கொள்ளக்கடவோம்" என்று அஸுரர்களோடேகூடி. தேவாஸுரர்களுக்கு விரோதமேபோக்கி ஸௌஹார்தமிஸேயிறே. "ஸந்தாநமஸுரை:க்ருத்வா". [நீரைக்கடைந்தவாறும்] - க்ஷீராப்தியையிறேகடைந்தது. ப்பலவேளையிலே தேவர்களம்ருதத்தை புஜிக்க, அஸுரர்களம்ருதத்தைவிட்டுப் போம்படிசெய்து [போன வித்தகமும்] - ஒருஸ்த்ரீவேஷத்தைக்கொண்டு அவர்கள்தொடரப் போனவிஸ்மயனீயமானசெயலும். "அம்ருதத்தைநாய்க்கிடாய்" என்று பின்தொடரும்படியான வடிவையாயிற்றுக்கொண்டது. "மாயயா மோஹயித்வா தாந் விஷ்ணுஸ்ஸ்திரீரூபமாஸ்த்தித:". [ஊடுபுக்கு] - தோற்புரையேபோகாதே மர்மத்திலே புக்கு. "அச்சேத்யோऽயமதாஹ்யோऽயம்" என்கிற வாத்மவஸ்துவை. [உருக்கியுண்டிடுகின்ற] - த்ரவத்ரவ்யமாக்கி, முடித்துவிடாதே யொழிகிறவுன்னை. "புருஷோத்தம னிப்படிசெய்வதே!" என்கிற குணப்ரஸங்கத்திலே சிதிலனாகாநின்றேன், தரித்தனுபவிக்கும்படி ஒரு நல்விரகு சொல்லவேணும். [நச்சு நாகணையானே] - நித்யாநுபவம் பண்ணுகிற திருவநந்தாழ்வானைப்போலே தரித்து நின்றநுபவிக்கும்படி பண்ணியருளவேணும்.

ஈடு. — பத்தாம்பாட்டு, ஸமுத்ரமதநவைசித்ர்யத்தை யநுஸந்தித்து சிதிலனாகாநின்றேன், உன்னை தரித்து நின்றநுஸந்திக்கவல்லேனாம்படி விரகு சொல்லவேணுமென்கிறார்.

[கூடிநீரைக்கடைந்தவாறும்] - "நாம் ஸமவிபாகம் பண்ணி புஜிக்கக்கடவோம்" என்று அஸுரர்களோடேகூடி ஸமுத்ரத்தைக்கடைந்தபடியும், கடைந்துபிடித்துக்காணுமிவருடைய ஆவியையுருக்கிற்று. [அமுதம் தேவருண்ண வித்யாதி] - ப்பலவேளையிலே வந்தவாறே ப்ரயோஜநரூபமான அம்ருதத்தை யநுகூலவர்க்கமான தேவஜாதியே புஜித்து, ஆஸுரப்ரக்ருதிகள் "அம்ருதத்தை நாய்க்கிடு" என்று அத்தைவிட்டு அவர்கள் பின்தொடரும்படிக்கீடாக தர்சநீயமான ஸ்த்ரீவடிவைக்கொண்டுபோன விஸ்மயநீயமான செயலும். *மாயயா மோஹயித்வாதாந் விஷ்ணுஸ்த்ஸ்த்ரீரூபமாஸ்ததி:* 'வானவரைப் பெண்ணுருவமூட்டும் பெருமானுர். கடைந்தவாற்றாலும் வித்தகத்தாலும்- [ஊடுபுக்கு] - தோற்புரையே போகாதே மர்மத்திலே புக்கு. [எனதாவியை] *அச்சேத்யோऽயமதாஹ்யோऽயம்* என்கிற ஆத்மவஸ்துவை. [உருக்கியுண்டிடுகின்ற நின்றன்னை] - த்ரவத்ரவ்யமாக்கி, முடித்துவிடாதேயொழிகிற உன்னை. "புருஷோத்தமனிப்படி செய்வதே" என்று இக்குணப்ரஸங்கத்திலே சிதிலனாகாநின்றேன், தரித்தநுபவிக்கும்படி நல்விரகு சொல்லவேணும். உம்மை தரிப்பிக்கப்போமோ நம்மாலென்ன; ஒருவன் பரமபோகியாய் நின்று தரித்து உன்னை யநுபவிக்கப்பண்ணிக்கொடுத்திலையோ; அப்படியே நானும் தரித்துன்னையநுபவிக்கும்படி பண்ணியருளவேணும்.

நாகணைமிசைநம்பிரான்சரணே சரண்நமக்கென்று* நாடொறு
மேகசிந்தையனாய்க் குருகூர்ச்சடகோபன்மாறன்*
ஆகநூற்றவந்தாதி யாயிரத்துள்ளிவையுமோர்பத்தும்வல்லார்*
மாகவைகுந்தத்து மகிழ்வெய்துவர்வைகலுமே. (11)

௬.—நிகமத்தில், இப்பத்தும்கற்றார் ஸ்ரீவைகுண்டத்திலேபோய் எம்பெருமானை நித்யாநுபவம் பண்ணப்பெறுவர் என்கிறார். [நாகணை என்று தொடங்கி] சரணம்புக்காரை எம்பெருமான் உபேக்ஷிக்க நினைக்கிலும், உபேக்ஷிக்கவொட்டாதே விஷயீகரிக்கப்பண்ணும் ஸ்வபாவமுள்ள திருவநந்தாழ்வான் மேலே கண்வளர்ந்தருளுவதும்செய்து. ஆச்ரிதவிஷயத்தில் உபகாரசீலனுமிருந்துள்ள எம்பெருமானுடைய திருவடிகளே நமக்கு சரணம் என்று. [நாடொறும் என்றுதொடங்கி] நாள்தோறும் இதொரு மநோரதமேயுடையரான ஆழ்வார் தாம் உளராகைக்காக பகவத்குணப்ரேரிதராய்க் கொண்டு சொன்ன ஆயிரம் திருவாய்மொழியிலும்.

இ.—நிகமத்தில், இப்பத்தும்கற்றார் பரமபதத்திலேபோய் நித்யாநுபவம் பண்ணப்பெறுவரென்கிறார். [நாகணை மிசை நம்பிரான்] - அனந்தசாயித்வம் ஸர்வாதிகவஸ்துவுக்கு லக்ஷணமாகையாலே, ஸர்வாதிகனேசரண்யனென்கிறது. திருவனந்தாழ்வானுடைய புருஷகாரபாவம் சொல்லுகிறதென்றுமாம். படுக்கையைச்சொல்ல - படுக்கையையுடையாரைச் சொல்லிற்றுமிறே. [நம்பிரான்] - ஆச்ரிதவிஷயத்தில் உபகாரசீலனானவன். [சரணே சரண்நமக்கென்று] - நமக்குத்திருவடிகளே உபாயமென்று, அவதாரணத்தாலே உபாயநைரபேக்ஷ்யம் சொல்லுகிறது. ஸாம்ஸாரிகஸ்வபாவங்கள் மேலிட்டு விபரீதமேபலியாநின்றாலும், இதொழியவேறொன்றில் கால் தாழாதொழிகை - மஹாவிச்வாஸமாகிறது. [நாடொறும் இத்யாதி] - நாள்தோறுமிதுவே மநோரதமானவாழ்வார், பகவத்குணப்ரேரிதராய்த் தாமுளராகைக்காக வருளிச்செய்த ஆயிரத்துளிவையுமோர் பத்தும்வல்லார். [மாகம்] - பரமாகாசம் என்னக்கடவதிறே. [வைகலும் - மகிழ்வெய்துவர்] - குணங்களை நினைத்து சிதிலனாகிறவென்னைப்போலேயன்றியே, தரித்தங்கே நின்றுநித்யாநுபவம்பண்ணப்பெற்று, பரமபதத்திலே ஆநந்தநிர்ப்பரராகக்கடவர்கள்.

ஈடு.— நிகமத்தில், இப்பத்தும் கற்றார் பரமபதத்திலே போய் நித்யாநுபவம் பண்ணப் பெறுவரென்கிறார்.

[நாகணையித்யாதி] - திருவனந்தாழ்வானைப் படுக்கையாகவுடைய ஸர்வேச்வரன் திருவடிகளே நமக்குபாயம் என்று. அநந்தசாயித்வம் — ஸர்வாதிகவஸ்துவுக்கு லக்ஷணமாகையாலே, ஸர்வாதிகனே சரண்யனென்கிறது. (திருவநந்தாழ்வானுடைய புருஷகாரபாவம் சொல்லுகிறதென்றுமாம்.) இவனுடைய வுபாயபாவத்தில் புருஷகாரமாகவல்லார் அவன்பரிகரத்திலுள்ளாராகாதே. படுக்கை கிடப்பது அந்த:புரத்திலேயிறே. [நம்பிரான்] ஆச்ரிதவிஷயத்திலுபகார சீலனானவன். [சரணே சரண் - என்று] அவதாரணத்தாலே உபாயநைரபேக்ஷ்யஞ் சொல்லுகிறது. ஸாம்ஸாரிக ஸ்வபாவங்கள் மேலிட்டு விபரீதமேபலியாநின்றாலு மப்படி யடிக்கழிவு செய்வாரொருவரல்லரே யிவர். இதொழிய வேறொன்றில் கால்தாழாதொழிகை - மஹாவிச்வாஸமாகிறது. இத்தால் ஏகபதத்திலர்த்தம் சொல்லுகிறது. [நாடொறு மேக சிந்தையனாய்.] - புறம்புண்டான சிந்தனைபோய், இவ்விஷயத்திலே ஏகாகாரமான மநோரதமுடையராய், அர்த்தார்ஜ்ஜநம் பண்ணப் போவாரொருசிராமை விச்வஸித்து நாலாண்டு பதிற்றாண்டிழியாநின்றார்களிறே. பேற்றின் சீர்மையைப்பார்த்தால் அவ்வளவாகிலும் வேண்டாவோ இவ்விஷயத்தில். ஸம்ஸாரஸ்வபாவத்தால் வ்யஸநபரம்பரைகள் வந்தாலும் வ்யவஸாயங்குலையாமே போருமதிறே ஸ்வரூபமாவது. [குருகூர்ச்சடகோபன்மாறன்] அதுக்கெல்லாவற்றுக்குமடியான பிறப்பிருக்கிறபடி, [ஆக நூற்றவந்தாதி] - தாமுளராகைக்காகச் சொன்னவந்தாதி ஆயிரத்திலு மிப்பத்தை அப்யஸிக்கவல்லார். [மாகமித்யாதி] - மஹாகாசமென்று பேரையுடைய ஸ்ரீ வைகுண்டத்திலே. [வைகலும் - மகிழ்வெய்துவர்] - காலதத்வமுள்ளதனையும் நித்யாநுபவம் பண்ணப்பெறுவர். அநுஸந்தானத்துக்கு விச்சேதம் வாராதபடி பண்ணியருளவேணும் என்று ப்ரார்த்திக்கவேண்டும்படியான ஸம்ஸாரத்தைவிட்டு, பகவதநுபவத்துக்கு விச்சேதமொருநாளுமில்லாத பரமபதத்திலே புக்கநுபவிக்கப்பெறுவர். மாவென்று - மஹத்தை , கம் என்று ஆகாசம்.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஐந்தாம்பத்து முற்றிற்று.

ஸ்ரீ:

மணவாளமாமுனிகள் அருளிச்செய்த

# திருவாய்மொழி நூற்றந்தாதி

கையாருஞ்சக்கரத்தோன் காதலின்றிக்கேயிருக்க*
பொய்யாகப்பேசும் புறனுரைக்கு—* மெய்யான
பேற்றையுபகரித்த பேரருளின் தன்மைதனை*
போற்றினனே மாறன் பொலிந்து. 41

** பொலிகபொலிகவென்று பூமகள்கோன்தொண்டர்*
மலிவுதனைக்கண்டுகந்து வாழ்த்தி*—உலகில்
திருந்தாதார் தம்மைத் திருத்தியமாறன்சொல்*
மருந்தாகப் போகுமனமாசு. 42

மாசறுசோதிக் கண்ணன்வந்துகலவாமையால்*
ஆசைமிகுந்துபழிக்கஞ்சாமல்—ஏசறவே*
மண்ணில்மடலூர மாறனொருமித்தான்*
உண்ணடுங்கத் தான்பிறந்தவூர். 43

ஊரநினைந்தமடல் ஊரவுமொண்ணாதபடி*
கூரிருள்சேர்கங்குலுடன் கூடிநின்று*—பேராமல்
தீதுசெய்ய மாறன் திருவுள்ளத்துச்சென்றதுயர்*
ஓதுவதிங் கெங்ஙனேயோ. 44

எங்ஙனேநீர்முனிவது என்னையினிநம்பியழகு*
இங்ஙனேதோன்றுகின்றதென்முன்னே*— அங்ஙன்
உருவெளிப்பாடா உரைத்ததமிழ்மாறன்*
கருதுமவர்க் கின்பக்கடல். 45

கடல்ஞாலத்தீசனை முன் காணாமல்நொந்தே*
உடலுமவனாக்கலுற்று*— திடமாக
வாய்ந்தவனாய்த்தான்பேசும் மாறனுரையதனை*
ஆய்ந்துரைப்பா ராட்செயநோற்றார். 46

நோற்றநோன்பாதியிலேன் உன்றனைவிட்டாற்றகில்லேன்*
பேற்றுக்குபாயமுன்றன்பேரருளே—சாற்றுகின்றேன்*
இங்கென்னிலையென்னும் எழில்மாறன்சொல்வல்லார்*
அங்கமரர்க்காராவமுது. 47

** ஆராவமுதாழ்வார் ஆதரித்தபேறுகளை*
தாராமையாலே தளர்ந்துமிக*—தீராத
ஆசையுடன் ஆற்றாமைபேசியலமந்தான்*
மாசறுசீர் மாறனெம்மான். 48

மாநலத்தால்மாறன் திருவல்லவாழ்புகப்போய்*
தானிளைத்துவீழ்ந்து தவ்வூர்தன்னருகில்*—மேல்நலங்கித்
துன்பமுற்றுச்சொன்ன சொலவுகற்பார்தங்களுக்கு*
பின்பிறக்கவேண்டா பிற. 49

பிறந்துலகங்காத்தளிக்கும் பேரருட்கண்ணன்*உன்
சிறந்தகுணத்தா லுருகுஞ்சீலத்—திறந்தவிர்ந்து*
சேர்ந்தனுபவிக்குநிலை செய்யென்றசீர்மாறன்*
வாய்ந்தபதத்தே மனமேவைகு. 50

ஜீயர் திருவடிகளே சரணம்